# நூல் அறிமுகம்

| | |
|---|---|
| நூலின் பெயர் | நஞ்சு அல்ல அமுது |
| நூலாசிரியர் | விசு அய்யர் |
| முதற் பதிப்பு | ௨022 |
| கணினி அச்சு உதவி | மணிகண்டன் |
| பக்கம் | 40 |
| எழுத்து | 11 புள்ளிகள் |
| நன்மதிப்பு | இந்திய ரூபாயில் 60/- |

# முகப்பு

எருக்கம்பால் கட்டிகளையே கரைக்கும்
வாயுவைத் திறக்கறவே கொன்றுவிடும் தீர செருக்கான
சந்நிவலி தீர்க்கும் சார்ந்த பல செந்தூரம்
உண்ணமுடியுமென ஓது''

, சித்தர்பாடல்.

# என்னுரை

எருக்கு என்றதுமே நஞ்சை பார்ப்பது போல ஒரு எட்டு பின்னுக்கு போவார்கள் தமிழர்கள். எருக்கின் மீது ஏன் இந்த வெறுப்பு என்று கேட்டாலும் என்னமோ தெரியவில்லை என்று தயங்குவார்களே ஒழிய சரியான விளக்கம் சொல்ல மாட்டார்கள்.

எருக்கன் செடிகளை, கிராமம் நகரம் என எங்கும் பார்க்கலாம். காலி நிலங்களிலும் வயல் வரப்புகளிலும் சாக்கடைஓரங்களிலும் வெகு சாதாரணமாக காணலாம். சிறு பிள்ளைகளாக இருக்கும் போது, இவற்றின் கொழுக்கட்டை போன்ற மொட்டுக்களை விரல்களால் அழுத்தினால் சிறு ஓசையுடன் அவை வெடிக்கும். நாம் எதையாவது நினைத்துக் கொண்டு இப்படி செய்து அது வெடித்தால், நினைத்தது நடக்கும் என்பது போல விளையாட்டு கிராமங்களில் சிறுவர்களிடையே நடக்கும் .

நினைத்தது நடந்ததோ இல்லையோ இப்போ எருக்கை பற்றி சிந்திக்கலாம் வாங்க என்ற நோக்கில் “நஞ்சு அல்ல அமுது” என்ற தலைப்பில் புத்தகத்தினை எழுதி படைக்கிறோம்.

இந்த புத்தகத்தில் எருக்கு பற்றிய இயல்பான நேர்மறை சிந்தனைகளை பதிவு செய்து இருக்கிறோம். இவைகள் பல நாட்களாக எனது அன்புக்குரிய நண்பர் திரு இரத்தினசபாபதி அவர்களிடம் பகிர்ந்து கொண்ட கருத்துக்களை ஒரு வடிவாக்கி நூலாக்கி தந்து இருக்கிறோம்.

கிரமாத்து புறங்களில், எடுக்கமுடியாமல் ஆழமாக காலில் முள் குத்தினால் எருக்கம்பாலை அந்த இடத்தில் வைத்து, முள்ளை எடுத்து

விடுவார்கள். எருக்கின் இலைகளின் மீதிருக்கும் மெழுகுப்பூச்சைச் சுரண்டி மூடிவைக்கும் வழக்கம் கூட இருந்தது.

பாம்பு, தேள். குளவி உள்ளிட்ட விஷக்கடிகளுக்கும் கடிவாயில் எருக்கிலைவிழுதை வைத்துக் கட்டுவார்கள். சில மணி நேரத்திலேயே விஷம் முறிந்து விடும்.

மிக அதிகமாகப் பார்த்தது என்றால், குதிகால் வலிக்கு, சூடான செங்கல்லின் மீது பழுத்த எருக்கிலைகளை வைத்து அவற்றின் மீது காலை வைத்து எடுப்பதை தான். இவ்வழக்கம் கிராம புறங்களில் பரவலாக நல்ல நிவாரணம் அளிப்பதாகவே இருந்து இருக்கிறது. எருக்கஞ்செடியின் குச்சிகள் கருக்கலைப்புக்கும் உபயோகப்பட்டது. என்று சொன்னால் சில கருத்தம்மாக்கள் நம்மை ஒரு மாதிரி பார்க்க தொடங்கி விடுவார்கள்.

அறிவியல் வளர்ந்து விட்ட இன்றைய நாளில் கூட சர்க்கரை நோயால் கால் உணர்வு இழந்து இருக்கும் நோயாளிகளுக்கு எருக்க இலையை பாதத்தில் வைத்து ஒரு சாக்ஸ் மாட்டி விட்டால், அந்த நிலை மாறி விடுகிறது என்று சொல்லப்படுகிறது.

இத்தனை சிறப்புகள் இருந்தாலும் எருக்கு என்றால் விவசாய தோட்டத்தில் வளர்வதை பலரும் விரும்புவதில்லை அதை வளர விடுவதில்லை. தானாக வந்தாலும் இதை weed என்று வெட்டி தள்ளி விடுகிறார்கள். இது weed அல்ல, நமக்கு நல் வாழ்வு தர வந்த seed என்பதை புரிந்து கொள்ள இந்த நூல் பயனாகும் என்றால் அதுவே இந்த நூல் படைப்பின் மகிழ்ச்சி.

இணர் ஊழ்த்து நாறா மலர் அனையர் கற்றது
உணர விரிந்து உரையாதார்

என திருவள்ளுவர் இந்த எருக்கம் பூவை உதாரணமாக காட்டுகிறார். கொத்தாக மலர்ந்தும் மனம் வீசாத பூ என சொல்வதால் இது எருக்கம் பூவை குறித்து சொன்ன செய்தி என்பதாக புரிந்துகொள்ள முடிகிறது.

கொத்தாக மலரும் மணம் வீசாத மலர்கள் சில உண்டு. உதாரணமாக. முருக்கம் பூ, வெட்சி பூ, கொன்றை, இப்படி சில சொல்ல முடியும். ஆனால்..

இந்த குறளில் எருக்கு தான் என்று உறுதியாக எடுத்துக் கொள்ள காரணம், பல நல்ல பயனுள்ள குணங்கள் இருந்தும் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளாத பூ எருக்கம் பூ என்பதை சொல்வதற்கு தானே என சிந்திக்கும் போது, திருக்குறளில் இடம் பெற்ற எருக்கு என்பதை நினைத்து பெருமை படுவதாக எனது நன்பர்களிடம் சொல்லி பெருமை கொள்வேன்.

எருக்கு - அதற்க்கு இல்லை செருக்கு என்பதால் தானோ எருக்கை சிவனார் முடி மீது சூடி உள்ளார் என வியக்கும் வகையில் தற்குறிப்பு செய்திகள் நிறையா வருகிறது. நேரமின்மையை கருதி, இந்த நூல் படைப்புக்கு ஆக்கமும் ஊக்கமும் செய்திகளும் தந்து உதவிய திரு.பூ.இரத்தினசபாபதி அவர்களுக்கும், புகைப்படம் தந்து உதவிய திரு.இராஜன் அவர்களுக்கும், கணினி தயாரிப்பில் உறுதுணையாக இருந்த திரு.மணிகண்டன் அவர்களுக்கும், ஓய்வுக்கு இடம் தந்து சிந்தனைக்கு வளம் தந்த G3 garden தோட்டத்திற்கும் எனது நன்றிகளை பதிகிறேன். நினைவில் வாழும் கோவை திரு.குப்புசாமி ஐயா அவர்களின் படைப்புகள் நம்மை புதிய புத்தகம் படைக்க தூண்டுகிறது. அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றிகளை பதிவு செய்கிறேன்.

நன்மையையும் தீமையும் கலந்தது தான் வாழ்க்கை. எல்லாவற்றிலும் நல்லவையும் உள்ளது அல்லவையும் உள்ளது அல்லவையை நீக்கி நல்லவையை கொள்ள வேண்டும் என்ற அடிப்படை உளவியலை கருத்தில் கொண்டு, எருக்கின் மீதான தவறான பார்வையை விலக்கி, ஒவ்வொருவரும் வீட்டில் அஷ்ட புஷ்பங்களில் ஒன்றான எருக்கை எந்த வித பராமரிப்பு செலவும் இல்லாமல் வளர்க்க வேண்டும். என்ற அன்பு வேண்டுகோளை பதிவு செய்து நூலுக்குள் அழைத்து செல்கிறேன்.

அன்புடன்

- விசு அய்யர்

iyervisuiyer@gmail.com

# அணிந்துரை

கணினி துறையைச் சார்ந்த என்னை “எருக்கு” பற்றிய இந்த ஆராய்ச்சித் தொகுப்பு அமைந்த புத்தகத்துக்கு அணிந்துரை எழுதித் தர கேட்டார் திரு விசு ஐயர். எனக்கு அந்தத் தகுதி இல்லை என்பதை நன்கு அறிந்திருந்தும், அவருடைய அன்புக்காக, நன்றியோடு சில கருத்துகளைப் பகிர்கிறேன்.



திருக்குறள் வகுப்பு, திருக்குறளைச் சார்ந்த சிந்தனைப் பகிர்வுகள் மூலமாக துவங்கிய எங்கள் நட்பு, இன்று தழைத்து வளர்ந்திருக்கிறது என்றால் திரு விசு ஐயர் அவர்களின் வித்தியாசமான அதே அமயம் ஆழமான சிந்தனைகளும், அதனை பாங்குடன் பகிரும் திறனும் தாம் காரணங்கள். என்னுடைய குறை அறிவினால் சில சமயம் அவர் பகிரும் சிந்தனைகளை உள்வாங்க முடியாது திணறினாலும், பொறுமையாக அவர் எனக்கு விளக்கும் பாங்கும், சில சமயம் அவருடைய கருத்தை நான் ஏற்க மறுத்தாலும் அன்போடு அதனை எதிர்கொள்ளும் பண்பும் அவரிடம் கற்றுக்கொள்ள வேண்டிய பாடங்கள். அவர் வாக்குக்கும் வாழ்க்கைக்கும் வேறுபாடு இன்றி வாழ்பவர் என்பது அவரோடு பழகியவர்களுக்கு நன்றாகத் தெரியும்.

நம் பாரத தேசத்தில் எத்தனையோ வேதாந்தங்கள், சித்தாந்தங்கள், சமயங்கள் என்று தோன்றித் தழைத்திருக்கின்றன. இதற்கெல்லாம் மூலகாரணம், நம் முன்னோர்கள் தம் புத்தியைத் தீட்டித் தீட்டி பல்வேறு கோணங்களில் சிந்தனைகள் செய்தது தாம். இது இப்படித் தான், இதற்கு மேல் சிந்திக்கக்கூடாது என்று நம் ரிஷிகள் மற்றும் மஹரிஷிகள் தடுத்திருந்தால் இவ்வளவு சிந்தனைகள் தோன்றியிருக்கமாட்டா. இது கடவுட் கொள்கையில் மட்டும் இல்லை, ஏனைய இலக்கியம், சமுதாயம், மருத்துவம் போன்ற விஷயங்களிலும் நாம் இதனைக் காணலாம். அப்படிப்பட்ட மரபைப் பேணி, சுதந்திரமான சிந்தனைகளை தொடர்ந்து செய்து வருபவர் திரு.விசு ஐயர். திருக்குறள், ஔவையின் பாடல்கள் என்று அவர் எடுத்தாண்ட புதிய சிந்தனைகள் ஏராளம். ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம் தான் இந்தத் தொகுப்பு நூல்.

இறைவனின் படைப்புகளில் எந்த ஒரு படைப்பும் தேவையில்லாததாக இருப்பதில்லை. நமக்கு அது பற்றிப் புரியாமல் இருக்கலாம் அல்லது நாம் தவறாக புரிந்துக் கொண்டிருக்கலாம். அப்படிப்பட்ட ஒரு பொருள் தான் எருக்கு என்பது இவருடைய ஆராய்ச்சித் தொகுப்பினைப் படிக்க நமக்கு விளங்குகிறது. பாம்பு கடித்து, அதன் விஷமானது இரத்தத்தில் நேரடியாக கலந்தால் அது பாதிப்பை உண்டாக்குகிறது. ஆனால் அதே பாம்பின் விஷத்தை வாய் மூலமாக மருந்தாக உட்கொண்டால் மருத்துவப் பயனை அளிக்கிறது. பாம்பின் விஷம் என்றால் அது எப்போதும் கேடு என்று நினைப்பது எப்படித் தவறோ, அது போலத் தான் எருக்கு என்றால் விஷம், அது விலக்கப்படவேண்டியது என்ற எண்ணமும் என்பது இவருடைய புத்தகத்தைப் படித்தால் தெளிவாகின்றது. அதற்காக நாம் இவரைப் பாராட்டவும் வணங்கவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

அவருடைய ஏனைய புதிய சிந்தனைகளும் இறைவன் திருவருளால் புத்தக வடிவமாக வெளிவரவேண்டும் என்ற என்னுடைய விருப்பத்தை இத்தருணத்தில் பகிர்ந்து கொள்கிறேன்.

- ஸ்ரீராம் ஸ்ரீனிவாசன்
tkssriram@hotmail.com

# வாழ்த்துரை

“**நஞ்சு அல்ல அமுது**” என இந்த புத்தகத்தை கொடுத்து வாழ்த்துரை வழங்க வேண்டி நூலாசிரியர் விசு அய்யர் கேட்டு இருந்தார். இது என்ன நூல், என அட்டையை பார்த்து வியந்து நின்றேன்.. இது நஞ்சா... ? அமுதா...? நம்மிடம் கேள்வியாக கேட்கிறாரா? என ஒரு நிமிடம் யோசித்தேன்..



அட்டையில் எருக்கும் பூ படம் என்னிடம் வாழ்த்துரைக்கு தந்த புத்தகம், ஆக, இது எருக்கு பற்றியதாக தான் இருக்கும் என முடிவு செய்து புரட்டினேன்... படிப்பதற்க்கு வியக்ககூடிய தலைப்புடன் விசு அய்யர் அவர்களின் கைவண்ணத்தில் பல மேற்கோள் சான்று கொடுத்து இது “நஞ்சு அல்ல அமுது” தான், என சொல்ல வைத்து விட்டார்.

அன்று முதல் இன்று வரை தமிழகத்தில், எருக்குஞ் செடி என்றால் அனைவராலும் ஒதுக்கப்பட்டு வந்த செடி தான். காரணம் எருக்கம் பால் பட்ட இடம் அரிப்பு எடுக்கும், தோல் வியாதியை தூண்டும் அளவிற்கு இந்த அரிப்பு இருக்கும் என்றால், அச்சம் யாருக்கு தான் இருக்காது.

ஆனால், இவர் படைத்து கோர்த்து செய்த சிந்தனைகளை புரட்டி பார்க்கும் போது தான் மேற்கு ஆப்பிர்க்காவின் பெனின் நாட்டில் இந்த எருக்கம்பாலை ஆட்டுப்பாலுடன் கலந்து சீஸ் செய்கிறார்கள் (https://agris.fao.org/agris-search/search.do?recordID=DE94Q0251) என்ற செய்தியை பார்த்து வியந்து போனேன்.

சங்ககால இலக்கியத்தில் எருக்கு பற்றி மிகவும் பேசபட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இந்துக்களின் முதற் கடவுளான விநாயகருக்கு உகந்த மலர் எருக்காகும். கொங்கு மண்டலத்தில் விநாயகருக்கு எருக்கு என்பது இன்றும் சிறப்பு சேர்க்கும். எருக்கு எல்லா இடத்திலும் வளரும் வறண்ட பூமியாக இருந்தாலும் சோர்வு இல்லாமல் வளரும். நீர் இல்லாமல் ஓராண்டு காலம் கூட வாழக்கூடிய தகவமைப்புடையது. அதன் பூ கிரீடம் போன்ற அமைப்புடையதால் ஆங்கிலத்தில் Crown flower என்று அழைப்பார்கள்.

அதன் பூ அமைப்பை நம்மால் உருவாக்க முடியாது என்பது உண்மை. மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் சிறு பூச்சியினங்களுக்கு அதன் இலை உணவாக பயண்படுகிறது என்றால் ஆச்சரியம் அல்லவா... ஐந்தறிவு படைத்த உயிரினங்கள் ஆறறிவு படைத்த நம்மை விட சூழல் பாதுகாப்பை உணர்ந்து வாழும் தகவமைப்பு உடையது, என்பதை உணர்ந்து கொள்ள வேண்டிய தருணம் இது.

திருமுறைகளில் பல இடங்களில் எருக்கு அதன் சிறப்பு என சொல்லப்பட்டு இருப்பதையும், வழிபாடு மற்றும் சடங்குகளில் கூட இதன் பயன்பாடு உள்ளது என்பதை கோர்த்து சிறப்பு செய்து இருக்கிறார் இந்த நூல் ஆசிரியர்.

ஒரு செய்தியை வித்தியாசமான கோணத்தில் பார்க்கும் இந் நூல் ஆசிரியரின் படைப்புகள், ஒவ்வொன்றும் பெயர் சொல்லும் வகையில் இருக்கும். அந்த வரிசையில் "நஞ்சு அல்ல அமுது" என்ற இந்த நூலும் இடம் பெறும் என்பதில் ஐயமில்லை.

இவரது எண்ணங்களைப் போலவே இவரது படைப்புகளும் மக்களுக்கு பயன் சேர்க்கும் என வாழ்த்தி அமைகிறேன்.

பூ. இரத்தினசபாபதி
சுற்று சூழல் நிபுணர்.
கோயம்புத்தூர்

# விநாயகர் வழிபாட்டில் எருக்கு

"காணாபத்யம்" என்பது அறுவகை வழிபாட்டில், கணபதியை முழுமுதற் கடவுளாக கொண்டு வழிபடும் முறை என்றாலும் இந்து மதத்தின் மற்ற பிரிவினரும் வினைகள் தீர விநாயகர் வழிபாடு தான் முதலில் செய்து வருவது வழக்கம்.

எந்த ஒரு வழிபாட்டுக்கு முன்பும் கணபதி வழிபாடு செய்வது இந்துக்களில் பெரும்பாலருக்கும் வழக்கம் என்பது சரி. இது தான் நடைமுறையும் கூட. ஆனால், கணபதியே முதல் கடவுள் அவருக்கு தான் முதலில் பூஜை என்று எப்படிங்க சொல்றாங்க என்று உங்களில் யாருக்காவது கேட்க தோன்றுகிறதா?

உண்மை தான். இது போல சின்ன குழந்தையாக இருக்கும் போது இப்படி கேள்வி கேட்டால், சும்மா துடுக்கு தனமாக கேட்க கூடாது பெரியவங்க சொன்னால் கேட்க வேண்டும் என்று சொல்லி நம்மை சிந்திக்க விடாமல் செய்து விடுவார்கள்.

இப்பவும் இன்றைய குழந்தைகள் இது போல கேள்வி கேட்பார்கள் அவர்களுக்கு நாம் பதில் சொல்ல விஷயங்களை தெரிந்து கொள்ள வேண்டுமே தவிர அவர்கள் சிந்தனையை தடுக்க கூடாது. அவ்வாறு செய்தால், இது ஒரு சடங்காக ஆகி விடும். அல்லது மூட நம்பிக்கையாக இருந்து விடும் உண்மை செய்திகள் நமக்கு தெரியாமலே போய் விடும். அதனால் ஒவ்வொரு செயல் முறைக்கும் ஒரு அடிப்படை காரணம் இருக்கும் அதை வாய்ப்பு கிடைக்கும்போதாவது தெரிந்து கொள்ள வேண்டும்..

அப்போது தான் அதை வளரும் தலைமுறையினருக்கு சொல்லி நமது கலாச்சாரத்தில் உள்ள சிந்தனைகளை சொல்லி புரிய வைக்க முடியும் இல்லையா. எந்த பூஜை செய்யும் முன்பும் விநாயகர் பூஜை செய்யவது ஏன் என்று தெரிந்து கொள்வோம். வாருங்கள்.

புது மனை புகுதல், வீட்டை புதுப்பித்தல் அல்லது வேறு எந்த சுப காரியத்திற்கு முன்பும் பிள்ளையார் பூஜை, கணபதி ஹோமம் என சொல்லிக் கொண்டே போகலாம். மஞ்சளிலாவது ஒரு பிள்ளையாரை பிடித்து இரண்டு பூவை வைத்து வழிபாடு செய்யும் பழக்கம் இன்னமும் நம்மவரிடம் இருக்கிறது தானே.

உங்களுக்கு தெரியும் மனித வாழ்வுக்கு முக்கியம் நீர் தான். ***“நீரின்றி அமையாது உலகு”*** என்பது திருக்குறள். எல்லா உயிரினங்களுக்கும் முக்கியம் நீர் மட்டுமே என்றால் இதை மறுப்பவர்கள் யாரும் இருக்க மாட்டார்கள் இல்லையா? அறிவியல் கூட இந்த உலகம் 71% நீர் 29% நிலத்தால் அமைந்தது என்று தானே சொல்லுகிறது.

அது சரிங்க விநாயகருக்கும் நீருக்கும் என்ன சம்பந்தம் என்று கேட்க வருகிறீர்கள் புரிகிறது. ஆகஸ்ட் மாதம் 12ம் தேதி உலக யானை தினமாக கொண்டாடப் படும் இந்தியாவில், யானை உருவம் கொண்ட தெய்வம் விநாயகர், யானைக்கு நீர் என்றால் பிடிக்கும். நீர் நிலைகளை கண்டால், யானை சிறு பிள்ளை தனமாக ஆட்டம் போட தொடங்கி விடும். நீண்ட தூரம் நீச்சல் அடிக்கும் பாலூட்டும் விலங்கு யானை தான். அதுவும் 6 கிலோமீட்டர் தொலைவில் உள்ள நீரை யானை அறிந்து கொள்ளும். என்று யானையை பற்றி ஒரு குட்டி விளக்கத்தையே தரலாம்.

அந்த அளவுக்கு அறிவு திறன் படைத்த யானை உருவம் கொண்ட பிள்ளையார் தான் நீர் மூலாதாரத்திற்கு மூல தொடர்பு உடையவர் என்றால் ஆச்சரியமாக உள்ளதா?

நீர் தான் முதல் என்பதால் தான் பிள்ளையாருக்கு முதல் பூஜை என்று வைத்திருக்கும் நமது சான்றோர் அறிவுத்திறனை எண்ணி வியக்காமல் இருக்க முடியுமா என்ன? அறிவியலை ஆன்மிகத்தில் வைத்து அப்படியே பழக்க படுத்தி விட்டார்கள். இது தான் தமிழர் வாழ்வியல் முறை.

எங்கெல்லாம் நீர் நிலைகள் உள்ளதோ அங்கெல்லாம் ஒரு விநாயகர் சிலை வைத்து விடுவார்கள். அரச மரத்து விநாயகர் என்று சொல்கிறோம். ஏன் தெரியுமா? அரச மரம் நீர் வளம் நிறைந்த செழிப்பான இடத்தில் தான் வளரும். அதனால் தான் அரச மரத்தடியில் விநாயகர். நீர் வளம் நிறைந்த ஆற்றின் கரையில் விநாயகர், ஆற்றங்கரை விநாயகர், என சிறப்பாக வழிபட படுகிறார்.

ஆண்டு தோறும் ஆவணி மாதம், சுக்ல பக்ஷ சதுர்த்தியில் வரும், பண்டிகை, விநாயகர் சதுர்த்தி. விநாயகர் சதுர்த்தி என்றதுமே,

நிவேதனத்திற்கு நாவல் பழமும், விளாம்பழமும் முதலில் வந்து நிற்கும்.

கஜானனம் பூத கனாதி சேவிதம்
கபித்த "ஜம்பு" பலசார பக்ஷிதம்
உமா சுதம் சோக வினாஷ காரணம்
நமாமி விக்னேஷ்வர பாத பங்கஜம்

என்ற பிள்ளையார் வழிபாடு பலருக்கும் தெரிந்து இருக்கும். இதில் வரும் ஜம்பு-நாவல் பழத்தை குறித்து சொல்கிறது என்பதை தெரிந்து கொள்ளுங்கள். சரி இதில் என்ன புதுசா தகவல் என்று யோசிக்கிறீர்கள் புரிகிறது.

நாவல் மரமும், விளா மரமும், நிலத்தடி நீர் எங்கே அதிகம் உள்ளதோ அங்கே தான் வளரும். இது போன்ற நீர் வளம் தேடும் மரங்களை சாஸ்திர நூல்கள் குறிப்பிட்டு காட்டுகின்றது. ஆக ஜலநாடி ஓடும் இடங்களில் எல்லா மரத்தடியிலும் பிள்ளையாரை வைத்து வழிபடும் பழக்கம் நம்மவர்களிடம் இருந்து இருக்கிறது. நீரின் ஆதாரத்தை முதன்மை படுத்தவே இதனை செய்து இருக்கிறார்கள். என்பதை புரிந்து கொள்ள முடிகிறது அல்லவா.

சாஸ்திரப்படி, நாவல் மரம் இருக்கும் இடத்தில் இருந்து கிழக்கே நான்கு அடி தொலைவில் நிலத்தடி நீர் இருக்கும். நாவல் மரத்திற்கு பக்கத்தில் எறும்பு புற்று இருந்தால், மரத்திற்கு தெற்கே 12 அடி ஆழத்தில் நீர் வளம் பெருகும். இது போல ஒவ்வொரு மரத்திற்கும் ஒரு குறிப்பிட்ட விளக்கம் சொல்லி இருக்கிறது.

பிள்ளையாருக்கு மாலை எருக்கும் பூ தான், விசேஷமாக சொல்லப்படுகிறது. அது தான் இந்த சிந்தனையின் முக்கிய அம்சம். எருக்கு நீர் இல்லாமலே 12 ஆண்டுகள் கூட வளரும். அதனால் தான் நீரை தன்னகத்தில் வைத்து இருக்கும் விநாயகருடன் ஒட்டி அது உறவாடுகிறது. என்பதை சொல்லித்தானா தெரிந்து கொள்ள வேண்டும்.



கங்கையை தலையில் கொண்ட சிவ பெருமானுக்கு எருக்கு தான் அஷ்ட புஷ்பங்களில் ஒன்றாக இன்றும் வழிபாடு செய்யப்படுகிறது. நாம் அனைவருக்கும் தெரிந்த கோளறு பதிகத்தில்

*பலபல வேடம் ஆகும் பரன் நாரி பாகன்*
*பசுஏறும் எங்கள் பரமன்*
*சலமகளோடு "**எருக்கு**" முடிமேல் அணிந்து என்*
*உளமே புகுந்த அதனால்*
*மலர்மிசையோனும் மாலும் மறையோடு தேவர்*
*வரு காலம் ஆன பலவும்*
*அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல அடியார் அவர்க்கு மிகவே.*

என்ற பாடலில், "எருக்கை' இறைவன் முடிமேல் அணிந்து இருப்பதாகவும் கங்கையை தலையில் கொண்ட இறைவன் என பதிக பாடலில் வருவதாலும், நீர் விரும்பும் தாவரங்களில் எருக்கும் உண்டு என்பதை புரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

"எருக்கு, நமக்கு இருக்கு" என அழுத்தமாக சொல்லியபடி எருக்கை பற்றி தெரிந்து கொள்ள தொடர்ந்து படியுங்கள்.

## மருத்துவத்தில் எருக்கு

எருக்கு என்றால் எல்லோருக்கும் பயமாக தான் இருக்கு. அதனால் இதற்கு ஆள்மிரட்டி என்ற பெயரை வைத்து இருக்கிறார்களோ என்று தெரியவில்லை.

எருக்கன் என்பது ஒரு செடி வகையைச் சேர்ந்தது. வறண்ட பிரதேசத்திலும் வளரும் ஒரு அற்புதமான தாவரம். ஒரு ஆள் உயரத்திற்குக் கூட உயர்ந்து அடர்த்தியாக படர்ந்து வளரும் என்றால் ஆச்சரியமாக உள்ளது அல்லவா.

நிறைய கிளைகள் விட்டு நுனியில் கொத்துக் கொத்தாக மொட்டு விட்டு மலர்ந்து காய்க்கும். கொத்தாக மலர்ந்தாலும் இதன் மலர்களில் வாசம் இருப்பது இல்லை. வாசமில்லா இந்த மலர் வசந்தத்தை தேடுவதில்லை.

இதன், அடியிலை பழுத்து மஞ்சள் நிறமாக மாறி கீழே விழுந்து விடும். எருக்கன் செடியின் நுனி முதல் அடிவேர் வரை பால் போன்று

நீரோட்டமிருக்கும். எருக்கன் செடியின் எந்த பாகத்தை ஒடித்தாலும் பால் போல் வெளிப்படும்.சில துளிகள் வெளிவந்தவுடன் தானே நின்று விடும். நீர் இல்லாமல் வளரும் இந்த செடியில் எப்படி நீரோட்டம் பாலாக இருக்கிறது என்பது வியப்பான ஒன்று தான்.

இதன் இலை சாம்பல் நிறத்தில் இருக்கும். 3 செ.மீ. கனமும் 10 செ.மீ. நீளமும் சுமார் 5 - 6 செ .மீ. அகலமும் முட்டை வடிவத்தில் இருக்கும்.

வெள்ளை மற்றும் நீல நிறம் என்ற இரு நிறங்களில் இவை காணப்பட்டாலும், வெள் எருக்கு என்றால் அதற்கு ஒரு தனி மவுசு இருக்க தான் செய்கிறது.

வெள்ளெருக்கனை மாந்தீரீக சம்பந்தமான காரியங்களுக்கும் பயன்படுத்துகின்றனர். அதனால் தான் எருக்கு என்றதுமே மற்றவர்களுக்கு பயம் வருகிறதா தெரியவில்லை. செடியின் நுனி முதல் வேர் வரை எல்லாமே மருத்துவ குணம் உடையன. வெள்ளெருக்கன் வேர் அதிசயமாக சில வினாயகர் உருவில் இருப்பதுண்டு. வினாயகர்சிலை இந்த வேரில் செய்து வைத்து வழிபட்டால் சிறந்த பலன் உண்டு என்று நம்ப படுகிறது.

*வெள்ளை மலர்களையுடைய வெள்ளெருக்கு சிறந்தது.*

*இலை நஞ்சு நீக்கல், வாந்தி உண்டாக்கல், பித்தம் பெருக்குதல், வீக்கம்,*
*கட்டிகளைக்கரைத்து வேதனை குறைத்தல் ஆகிய குணங்களை உடையது. பூ, பட்டை ஆகியவை கோழை அகற்றுதல், பசி உண்டாக்களல், முறை நோய் நீக்குதல் ஆகிய பண்புகளை உடையது.*

*1. இலையை அரைத்துப் புன்னைக் காயளவு பாம்பு கடித்தவருக்கு உடனே கொடுக்க விஷம் நீங்கும் என்று சொல்லப்படுகிறது.*

*2. தேள் கடிக்குச் சுண்டைக்காயளவு கொடுத்து கடிவாயில் வைத்துக் கட்டலாம்.*

*3. இலைச்சாறு மூன்று துளி, 10 துளி த் தேனில் கலந்து கொடுக்க வயிற்றுப் புழுக்கள் வெளியேறும்.*

*4. 200 மி.லி. உலர்ந்த பூவின் போடி சிறிது சர்க்கரையுடன் 2 வேலை சாப்பிட்டு வர வெள்ளை, பால்வினை நோய், தொழுநோய் ஆகியவை தீரும்.*

*5. வேரைக் கரியாக்கிப் பொடித்து விளக்கெண்ணெய் கலந்து மேற்பூச்சாகப் பயன்படுத்த கரப்பான், பால்வினை நோய்ப் புண்கள், ஆறாத காயங்கள் ஆகியவை தீரும்.*



மலர் பூத்துப் பிஞ்சாகி, காயாகி கொத்தாக இருக்கும். சுமார் 7 - 9 செ.மீ. நீளத்துடன் 3 - 4 செ.மீ. கனமுள்ளதாக இருக்கும். நன்கு முற்றிய பின் வெடித்து பஞ்சாக மாறி காற்றில் பறந்து சென்று விழுந்த இடத்தில் இனப்பெருக்கம் செய்யப்படுகின்றது. தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் தானே வளர்கிறது.

எருக்கம்பூவினால் செய்த மருந்து -சுவாசகுடாரி மாத்திரை -சளி ,இளைப்பு ,சுவாசம் போன்ற நோய்களை தீர்க்கும்.

இலைகள் : எருக்கன் செடியின் இலைகளை எரித்து, அதன் புகையை முகர்ந்தால், வாய் வழியாகச் சுவாசித்தால்,மார்புச் சளி வெளியேறும். ஆஸ்துமா, இருமல் கட்டுப்படும். இதன் இலைகள், பூக்கள், வேர், பட்டைகள், எண்ணெய் அனைத்துமே நச்சுக் கிருமிகளைக் கொல்லும் சக்தி வாய்ந்தவை.



மொட்டுகள் : இதன் மொட்டுகள், சுக்கு, ஓமம், கறுப்பு உப்பு ஆகியவற்றை மெல்லியதாகப் பொடியாக்கி, சிறிதளவு தண்ணீர் கலந்து பட்டாணி அளவிற்கு

மாத்திரைகளாக உருட்டிக் கொள்ள வேண்டும். தினசரி இரண்டு மாத்திரைகள் வீதம் காலை, மாலை வேளைகளில் சாப்பிட்டு வந்தால் அஜீரணம்,பசியின்மை, வாயு கோளாறு, வயிறு உப்புசம் ஆகியவை கட்டுப்படும்.

பூக்கள் : காலரா, வயிற்றுப் போக்கு, வாந்தி, குமட்டல் போன்றவற்றால் உடல் பலவீனம் அடைவதிலிருந்து காக்க இரண்டு எருக்கம் பூக்களை வாயில் போட்டு நன்றாக மெல்ல வேண்டும்.

பால் : எருக்கம் பால் தலைப் பொடுகு, படை, மூட்டு வலிகள், மூட்டு வீக்கம், மூலநோய்க்கு மருந்தாகப் பயன்தருகிறது.

கிராமப்புறங்களில் காலில் முள் குத்தி ஒடிந்து உள்ளே இருந்தால் அந்த இடத்தில் எருக்கம் பாலைத் தடவுவர். இதனால் வலி குறைவதுடன் முள் குத்திய இடம் விரைவில் பழுத்துச் சீழ் வெளியே வரும். அத்துடன் முள்ளும் வந்துவிடும். குதிகாலில் வலி வந்தால், செங்கல்லைச் சூடாக்கி அதன்மீது பழுத்த எருக்கிலையை வைத்து அதன்மேல் சூடு தாங்கும் அளவுக்குக் குதிகாலை வைத்து எடுத்தால் வலி குணமாகும். உடம்பில் கட்டிகள் தோன்றி உடையாமல் வேதனை கொடுத்தால் எருக்கு இலையை நெருப்பில் வாட்டி, தாங்கும் சூட்டுடன் கட்டியின் மீது வைத்துக் கட்டினால் கட்டி உடையும். எருக்கஞ் செடியின் குச்சியை, கருப்பைக்குள் செலுத்துவது கொடூரமான கருச்சிதைவு முறைகளில் ஒன்றாக உள்ளது.

வெள்ளெருக்கம்பூ Bronchitis, asthma ஆகியவற்றுக்குச் சிறந்தது.

தேவ மூலிகை அல்லது விருட்சம் என்று கூறப்படும் வெள்ளெருக்கு அரிதான பொருள் இருக்கும் இடத்தில்தான் முளைக்கும் என சங்க கால நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது.

புதையல், ரத்தினங்கள், சிலைகள் பதுக்கி வைத்திருக்கும் இடம் ஆகிய இடங்களில் மட்டுமே வெள்ளெருக்கு முளைக்கும் என விருட்ச நூல்களில் கூறப்பட்டுள்ளது. ஆனால் குப்பை மேடுகளிலும், தரிசு நிலங்களிலும் காணப்படும் எருக்கன் செடியை விஷ செடி என்று நாம் ஒதுக்கி விடுகிறோம்.

எருக்கன் செடியில் பூக்கும் பூக்களில் எண்ணற்ற மருத்துவ குணங்கள் கொண்டுள்ளன. விஷக்கடிக்கு மருந்தாக பயன்படும் இந்த பூக்கள் சிறுநீரக கோளாறுகளை மூன்று நாட்களில் குணமடையும்.

## ஆஸ்துமா குணமடையும்:

வெண்மை நிற எருக்கன் பூக்கள் ஆஸ்துமா நோய்க்கு மருந்தாகும். வெண்ணிற எருக்கன் பூக்களை அவற்றில் உள்ள நடு நரம்புகளை நீக்கிவிட்டு வெள்ளை இதழ்களை மட்டும் எடுத்து அதனுடன் சம அளவு மிளகு, கிராம்பு, சேர்த்து மை போல அரைத்து கிடைத்த விழுதை மிளகு அளவு மாத்திரைகளாக உருட்டி, நிழலில் உலர்த்தி பத்திரப்படுத்தி கொள்ளவும். இதனால் இரைப்பு நோய் அதிகரிக்கும் சமயம் ஒரு உருண்டை சாப்பிட்டு நீர் அருந்த உடனே தணியும்.

10 கிராம் இஞ்சி,3வெள்ளெருக்கன் பூ,6 மிளகு இவற்றை நசுக்கி அரை லிட்டர் நீரில் போட்டு கால் லிட்டராகக் காய்ச்சி தினம் இருவேளை பருகி வர இரைப்பு குணமாகிவிடும்.

## வாதவலி வீக்கம்

எருக்கன் பூவை தேவையான அளவு எடுத்து வதக்கி வீக்கம், கட்டிகள் மீது வைத்துக்கட்ட வீக்கம், கட்டி குறையும். ஆறாத புண்கள் இருந்தால் எருக்கன் பூக்களை உலர்த்தி பொடி செய்து வைத்துக்கொண்டு அந்த பொடியை புண்களின் மீது மருந்தாக போட்டு வர சீக்கிரத்தில் புண்கள் ஆறிவிடும்.

## பாம்பு கடி விஷமருந்து

நல்ல பாம்பு கடித்து விட்டால் உடனே எருக்கன் பூ மொட்டு 5 எடுத்து அதனை வெற்றிலையில் வைத்து நன்றாக மென்று சாப்பிட சொல்ல வேண்டும். இதனால் விஷம் இறங்கிவிடும். இதன்பின்னர் மருந்துவரிடம் சென்று சிகிச்சை அளிக்கவேண்டும்.

## மருத்துவப் பயன்கள்.-

இதன் பால் தீ போல சுடும். பட்ட இடம் புண்ணாகும். புழுக்களைக் கொல்லும். விஷக்கடிகளை குணமாக்கும். பயிர்களுக்கு எதிர்ப் பாற்றலைத் தரும்.இலை நஞ்சு நீக்கல் வாந்தியுண்டாக்குதல் பித்தம்

பெருக்குதல் வீக்கம் கட்டிகளைக் கரைத்து வேதனை குறைதல் ஆகிய குணங்களை உடையது. பூ, பட்டை, ஆகியவை கோழையகற்றுதல் பசியுண்டாக்குதல், முறை நோய் நீக்குதல் ஆகிய பண்புகளையுடையது.

பாம்பு - தேள் கடி -: இதன் இலையை அரைத்து 5 கிராம் அளவு பாலில் சாப்பிடவும். அரைத்து கடிவாயில் கட்டவும். விஷம் இறங்கும். எலிக் கடிக்குக் கொடுக்கலாம்.

குதிங்கால் வலி - :பழுத்த இலையை குதிங்கால் வீக்கத்தின் மீது வைத்து, சுட்ட செங்கல்லை அதன் மீது வைத்து, ஒத்தடம் கொடுத்துவர குணமடையும்.

மலக்கட்டு - 20 மி.லி. சிற்றாமணக்ககு எண்ணெயில் 3 - 5 துளி எருக்கன் பால் விட்டுக் கொடுக்க மலர்ச்சிக்கல் தீரும்.

வயிற்றுப் பூச்சி -: சிறு குழந்தைகளுக்கு வயிற்றில் கீரிப்பூச்சி, கொக்கிப் புழு இருந்து கொண்டு வயிற்று வலியை உண்டாக்கும். 5 கிராம் தேனில் 3 துளி இதன் இலைச் சாறு விட்டு மத்தித்துக் கொடுக்க புழுக்கள் வெளியேறும்.

காது நோய் - : எருக்கன் இலைச் சாறு 50 மி.லி.கலந்து வைக்கவும். இதில் வசம்பு, பெருங்காயம், இலவங்கம், பூண்டு வகைக்கு 5 கிராம் அளவு போட்டு காய்ச்சி வடித்து வைக்கவும். இதனைச் சொட்டு மருந்தாகக்காதில் விட காதில் சீழ் வடிதல், குருதி கசிதல், காதில் எழுச்சியினால் வரும் வலி ஆகியன குணமாகும்.

குட்டநோய் -: இதன் இலையும். வேர் பட்டையும் சம அளவில் உலர்த்திய பொடி 2-3 கிராம் ஆளவு பசு எண்ணெயில் கலந்து நாளும் இரு வேளை 48-96 நாள் சாப்பிட குட்ட நோய் குணமாகும், யானைக்கால் வியாதியும் குணமாகும். உப்பில்லாமல பத்தியம் இருத்தல் வேண்டும்.புளி காரம் எதுவும் கூடாது. தயிர் பால் மோரில்தான் சாப்பிடவேண்டும். இப்பொடியை தேங்காய் எண்ணெயில் கலந்து புண்ணுக்குத் தடவ குணமடையும்.

காக்கை வலிப்பு -: எருக்கன் இலையில் வெட்டுக்கிளி எச்சமிட்டிருக்கும். அத்துடன் இலையை எடுத்து உலர்த்திய பொடி 30 கிராம், மிளகுத்தூள் 30 கிராம், உந்தாமணி இலைத்தூள் 30 கிராம் சேர்த்து வைக்கவும். இந்த சூரணத்தை மூக்கில் நசியமிட பொடி போடுவது போல் உறிஞ்ச காக்கை வலிப்பு வராது.

பல்வலி -: எருக்கன் பூ 100 கிராம் , உப்பு 10 கிராம் சேர்த்து அரைத்து வடைபோல் தட்டி உலர்த்தி புடமிட்டு சாம்பலாக்கி அரைத்தால் சிறந்த பற்பொடி கிடைக்கும். இதில் பல் துலக்கினால் பல்சொத்தை, புழு, பல்லரணை, பல் கூச்சம் யாவும் குணமடையும்.

ஆஸ்த்துமா -: வெள்ளெருக்கன் பூ 100 கிராம், மிளகு 50 கிராம், இலவங்கம், குங்கும்ப்பூ, கோரோசனை வகைக்கு 10 கிராம் சேர்த்து அரைத்து மிளகளவு மாத்திரையாகச் செய்து உலர்த்தி வைக்கவும். காலை,மாலை ஒரு மாத்திரை தேனில் சாப்பிட்டு வந்தால் 48-96 நாளில் ஆஸ்த்துமா, இழப்பு, இரைப்பு, இருமல், காசம், ஜன்னி குணமடையும்.

சிற்றின்பம் -: இதே மாத்திரை இரண்டையும், 5 கிராம் ஜாதிக்காய்த் தூளையும் பாலில் கலந்து தினமும் இரவில் சாப்பிட்டு வர சிற்றின்பம் பெருகும்.

வாதவலி, வீக்கம் -: எருக்கம் பால் வாதக்கடிகளைக் கரைப்பதன்றி வாத நோய், சந்நிபாதம் ஐவகைவலி இவற்றைப் போக்கும்.

ஒரு தேக்கரண்டி அளவு நல்லெண்ணெயில் 7 துளி எருக்கம் பாலை விட்டு நன்றாய்க் குலுக்கி நாசிக்குள் 2-3 துளி விட அளவு கடந்த தும்மல் உண்டாகும். சிரசிலுண்டான நீரையெல்லாம் வெளிப்படுத்தும். காக்கை வலிக்குச் சிகிச்சை செய்யும் போது முதலில் இச்சிகிச்சை செய்வதினால் மூளையை அனுசரித்த சீதளத்தை அகற்றும் அந்தத் தும்மலை நிறுத்த வேண்டுமாயின் முகத்தில் சலத்தால் அடித்துக் குளிர்ந்த சலத்தைக் கொண்டு நாசியைச் சுத்தப் படுத்த வேண்டியது.

எருக்கன் பூவால் முறை சுரம் ,போகா நீர் பிநசம் சுவாசகாசம், கழுத்து நரம்பின் இசிவு ஆகியவை நீங்கும்.

எருக்கன் பூவிற்குச் சமனெடை மிளகு சேர்த்து மெழுகு வண்ணம் அரைத்து இரண்டு குன்றிப் பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலில் உலர்த்திக் கொண்டு தினம் 2 வேளை ஒவ்வொரு மாத்திரை வீதம் கொடுத்துவர முரைசுரம் நீங்கும்.

5 பலம் ஆவின் நெய்யில் 10-12 எருக்கம் பூவைப்போட்டுக் காய்ச்சி வடித்தெடுத்து வேளைக்கு அரை அல்லது ஒரு தோலா வீதம் கொடுக்க சுவாச காசம், நீர்ப்பீநசம் போம்.

10 மில்லி விளக்கெண்ணெயில் 3 துளி எருக்கு இலைச்சாறு விட்டு சாப்பிட்டு வந்தால் மலச்சிக்கல் குறைந்து மலம் இளகும்.



*குறிப்பு : எருக்கு மருந்து சிறுவர்களுக்கு ஆகாது. ஏதேனும் வேதனை இருப்பின் நல்லெண்ணெய் முறிப்பாகும்.*

எருக்கஞ்செடி குடும்பத்தைச் சேர்ந்தது வெள்ளெருக்கு. நீல எருக்கு, ராம எருக்கு என ஒன்பது வகையான எருக்குகள் இருக்கின்றன என சித்தவைத்தியர்கள் கூறுகின்றனர். எருக்கஞ்செடி 12 ஆண்டுகள் மழையில்லாமல் இருந்தாலும் கூட, சூரிய ஒளியிலுள்ள தண்ணீரை கிரகித்து வளரும் தன்மை கொண்டது.

அதன் பருவகாலத்தில் பூத்து,காய்த்து,வளர்ந்துவிடும்.இதில் விஷேச அம்சம் கொண்டதுதான் வெள்ளெருக்கு. இதை வீட்டிலும் வளர்க்கலாம். இதன் பூவை வைத்து விநாயகருக்கும், சிவனுக்கும் அர்ச்சனை செய்யலாம். சிவ வழிபாட்டில் சொல்லும் அஷ்ட புஷ்பங்களில் ஒன்று தான் இந்த எருக்கு. மற்றவைகள், 'புன்னை, செண்பகம், பாதிரி, நந்தியாவட்டை, அரளி, நீலோத்பலம், தாமரை" என்பன. இதில் எருக்கு உயிரோட்டம் நிறைந்த மலராக கருதப்படுகிறது.

வெள்ளெருக்கம் பூ சங்கை பஸ்மமாக்கப் பயன்படுகிறது. வெள்ளெருக்கு பட்டையை நூலுக்குப் பதில் விளக்குத்திரியாக போட்டு வீட்டில் எரிக்க சகல பூதங்களும் விலகி ஓடும்.

வெள்ளெருக்கு வடவேரில் மணிமாலை செய்யலாம். விநாயகர் செய்து வழிபடலாம்.

எட்டு வகை ஆகர்ஷணத்தில் தன ஆகர்ஷணம் பண வரவை அள்ளிக் கொடுக்கக் கூடியது இந்த வெள்ளெருக்கு விநாயகர் என நம்ப படுகிறது. (மருத்துவ குறிப்புகள் மற்றும் தகவல்கள் கோவை திரு குப்புசாமி ஐயா அவர்களின் மூலிகை வளம் என்ற வலைப்பூ மற்றும் மின் நூலில் உள்ளது)

## பக்தி இலக்கியத்தில் எருக்கு

சங்க இலக்கியத்தில், பக்தி இலக்கியத்தில், தெய்வீக காப்பியங்களில், நல்வழி சிந்தனைகளில் இந்த எருக்கு பற்றிய குறிப்பு கிடைக்குமா என்று தேடும் தமிழ் ஆர்வலர்களுக்காக சில சிந்தனைகளை பகிர்ந்து கொள்கிறோம்.

**வெள்எருக்கம்** சடைமுடியான் வெற்புஎடுத்த
திருமேனி மேலும் கீழும்
எள் இருக்கும் இடன்இன்றி உயிர்இருக்கும்
இடம்நாடி இழைத்த வாறோ
கள் இருக்கும் மலர்க்கூந்தல் சானகியை
மனச்சிறையில் கரந்த காதல்
உள் இருக்கும் எனக்கருதி உடல்புகுந்து
தடவியதோ ஒருவன் வாளி

(கம்ப. யுத்த காண்டம், இராவணன் வதைப் படலம், 237)

இந்த பாடலில், எருக்கு இறைவன் சடை முடியில் அணிந்த எருக்கு என்று நேர்மறை சிந்தனையில் - (பாசிடிவ் ஆன சிந்தனை) வந்து உள்ளது சிறப்பு தான்.

உருக்கார் வாளி கண்கள் பொருப்பார் வார்த னங்கள்
உகப்பார் வால சந்த்ர ...... னுதனூலாம்

உருச்சேர் நீண்ம ருங்குல் பணைத்தோ ளோதி கொண்ட
லுவப்பா மேல்வி ழுந்து ...... திரிவோர்கள்

அருக்கா மாதர் தங்கள் வரைக்கே யோடி யின்ப
வலைக்கே பூணு நெஞ்ச ...... னதிபாவி

அசட்டால் மூடு கின்ற மசக்கால் மாயு மிந்த

அவத்தா லீன மின்றி ...... யருள்வாயே

"**எருக்கார்**" தாளி தும்பை மருச்சேர் போது கங்கை
யினைச்சூ டாதி நம்பர் ...... புதல்வோனே

இருக்கா லேநி னைந்து துதிப்பார் நாவி னெஞ்சி
லிருப்பா யானை தங்கு ...... மணிமார்பா

செருக்கா லேமி குந்த கடற்சூர் மாள வென்ற
திறற்சேர் வேல்கை கொண்ட ...... முருகோனே

தினைக்கோர் காவல் கொண்ட குறத்தேன் மாது பங்க
திருப்போ ரூர மர்ந்த ...... பெருமாளே.

(அருணகிரிநாதர் அருளிய திருப்போரூர் திருப்புகழ்)

இந்த திருப்புகழில் கூட எருக்கு பற்றிய நேர்மையான சிந்தனையில் குறிப்பு கிடைக்கிறது.

மத்தமாமலர் கொன்றைவன்னியுங்
கங்கையாளொடு திங்களும்
மொய்த்தவெண்டலை கொக்கிறகொடு
"**வெள்ளெருக்க**"முஞ் சடையதாம்
பத்தர்சித்தர்கள் பாடியாடும்பைஞ்
ஞீலியேன்என்று நிற்றிரால்
அத்தியீருரி போர்த்திரோசொல்லும்
ஆரணீய விடங்கரே.

(சுந்தரர் தேவாரம் 7 ம் திருமுறை

புரையுடைய கரியுரிவைப் போர்வை யானைப்
புரிசடைமேற் புனலடைத்த புனிதன் றன்னை
விரையுடைய "**வெள்ளெருக்கங்**" கண்ணி யானை
வெண்ணீறு செம்மேனி விரவி னானை
வரையுடைய மகள்தவஞ்செய் மணாளன் றன்னை
வருபிணிநோய் பிரிவிக்கும் மருந்து தன்னை
நரைவிடைநற் கொடியுடைய நாதன் றன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே.

(அப்பர் தேவாரம் 6 ம் திருமுறை)

இறைக்கோ குறைவில்லை உண்டிறை யேஎழி லார் "**எருக்கு**"

நறைக்கோ மளக்கொன்றை துன்றும் சடைமுடி நக்கர் சென்னிப்
பிறைக்கோர் பிளவும் பெறுவிளிக் கொண்டெடம் பிரான்உடுக்கும்
குறைக்கோ வணம்ஒழிந் தாற்பின்னை ஏதுங்
குறைவில்லையே.

(கபிலர் அருளிய 11 ம் திருமுறை)

இப்படி தேவார திருமுறை வாசகங்கள் நேர்மறையான சிந்தனையில் எருக்கு பற்றி சொல்லி இருக்கின்றன. என்பதை எடுத்து சொல்ல இன்னும் எத்தனை சான்றுகள் வேண்டும் என கேட்பது போல தோண்ட தோண்ட சுரங்கம் போல சிந்தனைகள் வந்து கொண்டு இருக்கிறது. ஆனால் பாருங்கள் ஔவையார் அருளிய நல்வழி பாடலில்,

"வேதாளம் சேருமே "வெள் எருக்கு"ப் பூக்குமே
பாதாள மூலி படருமே - மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை."

(நல்வழி)

என எதிர்மறையில் உள்ளது போல தொனிக்கிறது.. இது தான் இப்போ நாம் எடுத்துக் கொள்ளும் சிந்தனை.

இத்தனை திருமுறை ஆசிரியர்கள், சமய சான்றோர்கள் எருக்கை நேர்மைறை சிந்தனையில் சொல்லி இருக்க, நல்வழி காட்டும், தமிழ் பாட்டிக்கு மட்டும் அப்படி என்ன எருக்கின் மீது கோபம் என்பது போல சிந்திக்க தோன்றும்.. உண்மையில் ஔவையார் சொன்னது எருக்கு பற்றிய எதிர்மறை சிந்தனை இல்லை.

இதனை உரையாசிரியர்கள் மாற்றி சொல்லி இருக்கலாமே அன்றி ஔவையார் அப்படி சொல்லி இருக்க வாய்ப்பே இல்லை. எருக்கு என்பதற்கு உலக புகழ் பெற்ற வின்ஸ்லோ தமிழ் அகராதியில் "***துன்பம்***" என்று குறிப்பிட்டு இருக்கும். சரி அப்படி என்றால் "வெள் எருக்கு பூக்குமே" என்று ஔவையார் சொல்ல வந்தது ஏன் என தெரிந்து கொள்ள வேண்டாமா?

ஒரு பெண் பருவம் எய்தும் நிலை ஏழு அவை
01 வயது முதல் 08 வயது வரை -பேதை
09 வயது முதல் 10 வயது வரை - பெதும்பை
11 வயது முதல் 14 வயது வரை - மங்கை
15 வயது முதல் 18 வயது வரை - மடந்தை
19 வயது முதல் 24 வயது வரை - அரிவை
25 வயது முதல் 29 வயது வரை - தெரிவை
30 வயதுக்கு மேல் - பேரிளம் பெண்

என தமிழ் சொல்கிறது.

இந்த பருவம் அடையும் நிலை பெண்ணை போலவே ஆணுக்கும்
1 வயது முதல் 7 வயது வரையிலான பருவம் - பாலன்
8 வயது முதல் முதல் 10 வயது வரையிலான பருவம் - மீளி
11 வயது முதல் 14 வயது வரையிலான பருவம் -மறவோன்
15வயதிற்கு உண்டான பருவம் -திறவோன்
16வயதிற்கு உண்டான பருவம் -விடலை ‘
17 வயது முதல் 30 வரையிலான பருவம் - காளை
30 வயதுக்கு மேலான பருவம் - முதுமகன்

என ஏழு பருவ நிலையை குறித்து சொல்கிறது.. இந்த பருவ நிலை ஆண் பெண்ணிற்கு மட்டுமல்ல, மலர்களுக்கும் தான்.



மலர்களின் பருவ நிலை 12, அவை, மகரந்த சேர்க்கையிலே மகிழ்வோடு உதித்து முகத்தை முகப்பிலே காட்டும் நிலை “**மொக்கு**” எனும் நிலை!!

மொக்கில் தவமிருந்து இதழ்கள் தருவித்து இறுக்கமாய் மொட்டில் குவிந்த நிலை “**மொட்டு**” எனும் நிலை!!

மொட்டில் மருவித்து அகத்தில் இதழ்விரிய ஆரம்ப சூழ்நிலையே “**அரும்பு**” எனும் நிலை!!

அரும்பிய நிலைமாறி விரியும் இதழ்கள் மேடிட்ட பரப்பாய் பொங்கி வருதலே “**முகிழ்**” எனும் நிலை!!

முகிழ்ந்து எழுந்து விரிந்த இதழ்கள் மணம் பரப்ப எத்தனிக்கும் நிலையே “**முகை**” எனும் நிலை!!

முகையின் வகையாலே காற்றெனும் ஊடகத்தில் மலர்ந்து மணம் கமழும் நிலையே “**மலர்**” எனும் நிலை!!

மலரென பெயர்கொண்டு சந்தைக்கு வந்தபின் தானிருக்கும் நிலைகாட்ட நன்கு மலரும் நிலையே “**அலர்**” எனும் நிலை!!

அலர்ந்து அகன்றபின் காம்பினின்று கழன்று வீழும் நிலையே “**வீ**” எனும் நிலை!!

“வீ” என அலறி வீழ்ந்து பின்னர் தன்னிலை துறந்து வாடி வதங்கிய நிலையே “**செம்மல்**” எனும் நிலை!!

என்ற இந்த மலரின் பருவ நிலையில் பூக்கும் நிலை என்பது வளர்ந்த நிலையை சொல்கிறது. எருக்கு மொட்டாகி, மலர்வது என்பதை குறிப்பது போல, “இன்பம்” எப்படி வாழ்க்கையில் மலருமோ, அது போல “துன்பமும்” மலரும்

என்று சொல்வதற்கு தான் (எருக்கு- துன்பம்) நல்வழியில் ஔவையார் இப்படி பாடலை அமைத்து இருக்கிறாரே அன்றி எருக்கை எதிர்மறை கண்ணோட்டத்தில் சொல்லவில்லை என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

சரியான உரை ஆசிரியர்களின் சிந்தனைகளை படிக்கும் போது, நாம் தெளிவாக இதனை புரிந்து கொள்ள முடியும். ஆக, எருக்கில் இருக்கு ரகசியம் அத்தனையும் பொக்கிஷம் என்பதை புரிந்து கொள்ளுங்கள்.

## மனிதனுக்கு மட்டுமா? எருக்கு ?



எருக்கு மனிதனுக்கு பயன் படும் தாவரம் என்று சொன்ன பிறகு, "மனிதனுக்கு மட்டுமா?" என்ற பேராசை எண்ணம் நம்மிடம் வராமலா இருக்கும். எருக்கின் பயன்கள் இத்தனை என்று சொன்ன பிறகும், விட்டு விடுவார்களா என்ன.? தேவ மூலிகையாக உள்ள, இந்த தாவரம் மருத்துவ பயனுக்கு மட்டுமல்லாமல், இந்த எருக்கம் பஞ்சில் இருந்து ஆடைகள் செய்யவும் பயன்படுகிறது.

இன்றைய நாகரீக உலகில், ஆண்களும் பெண்களும் அணியும் டீ சர்ட் பயன்பாட்டில் எருக்கின் பங்கு இருக்கிறது என்றால் ஆச்சரியமாக தான் இருக்கும். பெண்கள் விரும்பி அணியும் லெக்கின்ஸ் போன்ற உடைகளிலும், பருத்தி பஞ்சுடன், எருக்கம் பஞ்சு தன் பங்களிப்பை தருகிறது என்றால் வியப்பாக தான் இருக்கும்.

எருக்கு செடியின் தண்டுகளில் இருந்து எடுக்கப்படும் நார், பண்டைய நாளில் வில்லின் நாணுக்கும், இன்றைய பிளாஸ்டிக் மீன் வலைகள் வருவதற்கு முன்பு மீன் பிடி வலைகள் செய்யவும் பயன்பாட்டில் இருந்ததாக குறிப்புகள் சொல்கிறது.

அசாம் போன்ற மாநிலங்களில், பழங்குடி சமூகத்தவர்களிடம், திருமணம் மற்றும் மரண சடங்குகளில் எருக்கு மலர் மாலைகளை பயன்படுத்துகிறார்கள். பிரபல பாலிவுட் நடிகர் மிலிந்த் சோமன் திருமணத்தில் மணமக்கள் எருக்கு மாலையில் அலங்காரம் செய்து இருந்த புகைப்படங்கள் பல சமூக வலைப்பதிவுகளில் உலா வந்ததை நாம் பார்த்து இருப்போம்.

பஞ்ச பல்லவா (Pancha Pallava) எனப்படும் ஐந்து இலைகள் கொண்டு மராத்தியர்களின் முக்கிய விழாவில், விழாவில் எருக்கின் இலைகளும் உண்டு. எருக்கை அவர்கள் 'ரூய்' (Rui) என்று குறிப்பிடுகிறார்கள்.



( https://en.wikipedia.org/wiki/Panch_pallava)

நவக்கிரக வழிபாட்டில் தலைமை கிரகம் சூரியன், அந்த சூரியனுக்குரிய தாவரமாக அர்க்க என சொல்லும் எருக்கு தான் முதன்மை முதன்மை படுத்தப்பட்டு உள்ளது.

இந்துக்கள் வழிபாட்டில் கூட, ரதசப்தமி அன்று, எருக்கன் இலையை தலையில் வைத்துக் கொண்டு குளிக்கும் வழிபாட்டு சடங்கு இன்றும் நடைமுறையில் உள்ளது.(வழிபாட்டு முறைகள், புரான கதைகள் இவைகளை சொல்ல தேவையில்லை என்பதால் இங்கே குறிப்பிட்டு சொல்லவில்லை)

ருத்ரருடன் தொடர்பு கொண்ட செடி என்பதால் இதனை “புனித செடி” என அதர்வண வேதம் கூறுகிறது. **அக்கினி புராணத்தில்** மன்னர் எருக்கம் பூமாலை அணிந்து சென்றால் வெற்றி பெறுவார் என்று கூறப்படுகிறது. “சிவமஞ்சரி” எனும் நூலில் சிவனுக்கு காலையில் பூஜிக்க சிறந்த மலர் “எருக்க மலர்” என்று கூறப்படுகிறது.

**சங்க காலத்திலும் இச்செடிக்கு பெயர் “எருக்கு” என்பதே. அனைத்து சங்க இலக்கிய புலவர்களும் தங்கள் பாடல்களில் ஒப்புமை கூற எருக்கஞ் செடியை பயன்படுத்தியுள்ளனர்.**

மருத்துவ பயன்பாட்டில் எருக்கு சரி, வழிபாட்டில் எருக்கு சரி, மாந்தரீக தாந்தரீக முறைகளில் எருக்கு ஆடைகளில் எருக்கு சரி, சமூக சடங்குகளில் சரி, இவ்வளவு தானா என கேட்டு ஓய்வுக்கு போக வேண்டாம். கொஞ்சம் பொறுங்கள்.



வெட்டுக்கிளி தெரியுமா? இது இறக்கை கட்டி பறக்கும்கிளி அல்ல. மேய்ச்சல் நிலங்கள் மற்றும் இயற்கையான புல்வெளிகளில் உள்ள

மேலாதிக்கமுள்ள முதுகெலும்பில்லாத உயிரினங்கள் தான் இந்த வெட்டுக்கிளிகள்.



.

சில வெட்டுக்கிளிகள் மர நாற்றுகள் மற்றும் விவசாய பயிர்களுக்கு குறிப்பிடத்தக்க சேதத்தை ஏற்படுத்துகின்றன. அவை பல பறவைகள் மற்றும் பாலூட்டிகளுக்கான உணவுச் சங்கிலியின் முக்கிய கூறுகளாகும்.

இந்த வெட்டுக்கிளி இனத்திற்கான உணவு இந்த "எருக்கன்" செடி தான். எருக்கின் அடியில் முட்டை இட்டு, எருக்கு இலையையே தின்று வாழும் மொனார்க் வகை பட்டு பூச்சிக்கும் எருக்கே துணை



எருக்கின் பயன் இதோடு நின்று விடவில்லை விவசாய நிலத்தில் பூக்கள் தாங்காமல் உதிர்ந்துபோகும் நிலை இருக்கும் பூச்சி அரிப்பு இருக்கும். அதற்கு இந்த எருக்கு தான் பூச்சிக் கொல்லியாக செயல்படுகிறது. விவசாய நிலத்திற்கு போரான் சத்து தரும் இந்த எருக்கு மனிதனுக்கு மட்டுமல்ல, மற்ற உயிர்களுக்கு மட்டுமல்ல, விவசாய நிலத்திற்கும் பயன்படும் அரிய பொக்கிஷம்.

இப்போ சொல்லுங்க, எருக்கை வேண்டாம் என்று சொல்லலாமா?

## வழிபாட்டு தலங்களில் எருக்கு

திருஎருக்கத்தம்புலியூர், திருக்கானாட்டுமுள்ளூர் , திருமங்கலக்குடி ஆகிய திருக்கோயில்களில் தலமரமாக விளங்குவது வெள்ளெருக்கு ஆகும். இவற்றுள் திருக்கானாட்டுமுள்ளூரில் வெள்ளெருக்கு தற்போதில்லை. எருக்கத்தம்புலியூரில் விழாக் காலங்களில் வெள்ளெருக்கம் பூவால் பூசிக்கப்படுகிறது.

## சைவ திருமுறைகளில் எருக்கு

சைவ திருமுறைகள் என சைவ பெருமக்கள் பெரிதும் போற்றும் பன்னிரு திருமுறைகளில் இடம்பெற்றுள்ள எருக்கு பற்றிய குறிப்புகளை தொகுத்து தருகிறோம்.

இலையார் தருசூலப் படையெம் பெருமானாய்
நிலையார் மதில்மூன்று நீறாய் விழவெய்த
சிலையான் எருக்கத்தம் புலியூர்த் திகழ்கோயில்
கலையான் அடியேத்தக் கருதா வினைதானே

. - திருஞானசம்பந்தர்.

வண்டணை கொன்றை வன்னியு மத்தம்
மருவிய கூவிளம் **எருக்கொடு** மிக்க
கொண்டணி சடையர் விடையினர் பூதங்
கொடுகொட்டி குடமுழாக் கூடியு முழவப்
பண்டிகழ் வாகப் பாடியோர் வேதம்
பயில்வர்முன் பாய்புனற் கங்கையைச் சடைமேல்
வெண்பிறை சூடி உமையவ ளோடும்
வெங்குரு மேவியுள் வீற்றிருந் தாரே. 1.75.4

ஏறுமொன் றேறி நீறுமெய் பூசி
இளங்கிளை யரிவையொ டொருங்குட னாகிக்
கூறுமொன் றருளிக் கொன்றையந் தாருங்
குளிரிள மதியமுங் கூவிள மலரும்
நாறுமல் லிகையும் **எருக்கொடு** முருக்கும்
மகிழிள வன்னியும் இவைநலம் பகர
ஆறுமோர் சடைமேல் அணிந்த வெம்மடிகள்
அச்சிறு பாக்கம தாட்சிகொண் டாரே. 1.77.7

நீரோடு கூவிளமும் நிலாமதியும்
வெள்ளெருக்கும் நிறைந்தகொன்றைத்
தாரோடு தண்கரந்தைச் சடைக்கணிந்த
தத்துவனார் தங்குங்கோயில்
காரோடி விசும்பளந்து கடிநாறும்
பொழிலணைந்த கமழ்தார்வீதித்
தேரோடும் அரங்கேறிச் சேயிழையார்
நடம்பயிலுந் திருவையாறே. 1.130.5

வன்னி கொன்றை மதமத்தம் எருக்கொடு கூவிளம்
பொன்னி யன்ற சடையிற் பொலிவித்த புராணனார்
தென்ன வென்றுவரி வண்டிசை செய்திரு வாஞ்சியம்
என்னை யாளுடை யானிட மாகவு கந்ததே. 2.7.1

விடையுடை யப்பனொப்பில் நடமாட வல்ல
விகிர்தத் துருக்கொள் விமலன்
சடையிடை வெள்ளெருக்க மலர்கங்கை திங்கள்
தகவைத்த சோதிபதி தான்
மடையிடை யன்னமெங்கும் நிறையப் பரந்து
கமலத்து வைகும் வயல்சூழ்
கொடையுடை வண்கையாளர் மறையோர்க ளென்றும்
வளர்கின்ற கொச்சை வயமே. 2.83.2

பலபல வேடமாகும் பரனாரி பாகன்
பசுவேறும் எங்கள் பரமன்

சலமக ளோடு **எருக்கு** முடிமேல் அணிந்தென்
　　உளமே புகுந்த அதனால்
மலர்மிசை யோனுமாலும் மறையோடு தேவர்
　　வருகால மான பலவும்
அலைகடல் மேருநல்ல அவைநல்ல நல்ல
　　அடியா ரவர்க்கு மிகவே. 2.85.9

விண்ட**வெள்ளெ ருக்க**லர்ந்த வன்னிகொன்றை மத்தமும்
இண்டைகொண்ட செஞ்சடை முடிச்சிவ னிருந்தவூர்
கெண்டைகொண் டலர்ந்தகண்ணி னார்கள்கீத வோசைபோய்
அண்டரண்டம் ஊடறுக்கும் அந்தணாரூ ரென்பதே. 2.101.2

அன்ன மென்னடை அரிவையோ டினிதுறை
　　அமரர்தம் பெருமானார்
மின்னு செஞ்சடை **வெள்ளெருக்** கம்மலர்
　　வைத்தவர் வேதந்தாம்
பன்னு நன்பொருள் பயந்தவர் பருமதிற்
　　சிரபுரத் தார்சீரார்
பொன்னின் மாமலர் அடிதொழும் அடியவர்
　　வினையொடும் பொருந்தாரே. 2.102.1

வெண்ணி லாமிகு விரிசடை யரவொடு
　　**வெள்ளெருக்** கலர்மத்தம்
பண்ணி லாவிய பாடலோ டாடலர்
　　பயில்வுறு கீழ்வேளூர்ப்
பெண்ணி லாவிய பாகனைப் பெருந்திருக்

கோயிலெம் பெருமானை
உண்ணி லாவிநின் றுள்கிய சிந்தையார்
உலகினில் உள்ளாரே. 2.105.3

துன்று வார்சடைத் தூமதி மத்தமுந்
துன்**எருக் கார்**வன்னி
பொன்றி னார்தலைக் கலனொடு பரிகலம்
புலியுரி யுடையாடை
கொன்றை பொன்னென மலர்தரு கோட்டூர்நற்
கொழுந்தேயென் றெழுவாரை
என்று மேத்துவார்க் கிடரிலை கேடிலை
ஏதம்வந் தடையாவே. 2.109.6

கங்கைதிங்கள் வன்னிதுன் **எருக்கின்**னொடு கூவிளம்
வெங்கண்நாகம் விரிசடையில் வைத்தவிகிர் தன்னிடஞ்
செங்கயல்பாய் புனலரிசில் சூழ்ந்ததில தைப்பதி
மங்குல்தோயும் பொழில்சூழ்ந் தழகார்மதி முத்தமே. 2.118.4

கலிபடு தண்கடல் நஞ்சமுண் டகறைக் கண்டனும்
புலியதள் பாம்பரைச் சுற்றினா னும்புன வாயிலில்
ஒலிதரு தண்புன லோடு **எருக்கும்**மத மத்தமும்
மெலிதரு வெண்பிறை சூடிநின் றவிடை யூர்தியே. 3.11.5

தொடைமலி இதழியுந் துன்**எ ருக்கொடு**
புடைமலி சடைமுடி யடிகள் பொன்னகர்
படைமலி மழுவினர் பைங்கண் மூரிவெள்

விடைமலி கொடியணல் விசய மங்கையே. 3.17.4

பாடினார் அருமறை பனிமதி சடைமிசைச்
சூடினார் படுதலை துன் **எருக் க**தனொடும்
நாடினார் இடுபலி நண்ணியோர் காலனைச்
சாடினார் வளநகர் சக்கரப் பள்ளியே. 3.27.2

தடவரை யெடுத்தவன் தருக்கிறத் தோளடர்
படவிரல் ஊன்றியே பரிந்தவற் கருள்செய்தான்
மடவரல் **எருக்கொடு** வன்னியும் மத்தமும்
இடமுடைச் சடையினன் ஏடகத் திறைவனே. 3.32.8

விடையுயர் வெல்கொடியான் அடிவிண்ணொடு மண்ணுமெல்லாம்
புடைபட ஆடவல்லான் மிகுபூதமார் பல்படையான்
தொடைநவில் கொன்றையொடு வன்னிதுன் **எருக்கு ம**மணிந்த
சடையவன் ஊர்பனந்தாள் திருத்தாடகை யீச்சரமே. 3.62.6

கோளரவு கொன்றைநகு வெண்டலை **எருக்கு**வன்னி கொக்கிறகொடு
ம்
வாளரவு தண்சலம கட்குலவு செஞ்சடைவ ரத்திறைவனூர்
வேளரவு கொங்கையிள மங்கையர்கள் குங்குமம்வி ரைக்குமணமார்
தேளரவு தென்றல்தெரு வெங்கும்நிறை வொன்றிவரு தேவூரதுவே.
3.74.2

தொடைத்தலை மலைத்திதழி துன்னிய **எருக்கு** அலரி வன்னிமுடியி
ன்
சடைத்தலை மிலைச்சிய தபோதனன் எமாதிபயில் கின்றபதியாம்
படைத்தலை பிடித்துமற வாளரொடு வேடர்கள் பயின்றுகுழுமிக்

குடைத்தலை நதிப்படிய நின்றுபழி தீரநல்கு கோகரணமே. 3.79.5

காரணி வெள்ளை மதியஞ்சூடிக் கமழ்புன் சடைதன்மேற்
தாரணி கொன்றையுந் தண் **எருக்கு**ந் தழையந் நுழைவித்து
வாரணி கொங்கை நல்லாள்தனோடும் வலஞ்சுழி மேவியவர்
ஊரணி பெய்பலி கொண்டுகந்த உவகை அறியோமே. 3.106.2

**வெள்ளெருக்கொடு** தும்பை மிலைச்சியே வேறுமுன்செலத் தும்பை மிலைச்சியே
அள்ளிநீறது பூசுவ தாகமே யானமாசுண மூசுவ தாகமே
புள்ளியாடை யுடுப்பது கத்துமே போனவூழி யுடுப்பது கத்துமே
கள்ளுலாமலர்க் கம்ப மிருப்பதே காஞ்சிமாநகர்க் கம்ப மிருப்பதே. 3.114.3

மடல்மலி கொன்றை துன்றுவாள் **எருக்கும்** வன்னியும் மத்தமுஞ் சடைமேற்
படலொலி திரைகள் மோதிய கங்கைத் தலைவனார் தம்மிடம் பகரில்
விடலொலி பரந்த வெண்டிரை முத்தம் இப்பிகள் கொணர்ந்துவெள் ளருவிக்
கடலொலி யோதம் மோதவந் தலைக்குங் கழுமல நகரென லாமே. 3.118.1

செந்துவர் வாயாள் சேலன கண்ணாள் சிவன்திரு நீற்றினை வளர்க்கும்
பந்தணை விரலாள் பாண்டிமா தேவி பணிசெயப் பாரிடை நிலவுஞ்
சந்தமார் தரளம் பாம்புநீர் மத்தந் தண் **எருக் கம்மலர்** வன்னி
அந்திவான் மதிசேர் சடைமுடி யண்ணல் ஆலவா யாவதும் இதுவே. 3.120.3

வண்டுலவு கொன்றை வளர்புன்

சடையானே என்கின் றாளால்
விண்டலர்ந்து நாறுவதோர் **வெள்ளெருக்க**
நாண்மலருண் டென்கின் றாளால்
உண்டயலே தோன்றுவதோர் உத்தரியப்
பட்டுடையன் என்கின் றாளாற்
கண்டயலே தோன்றுங் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள் கொல்லோ. 4.6.2

மீனுடைத் தண்புனல் வீரட்ட
ரேநும்மை வேண்டுகின்ற
தியானுடைச் சில்குறை ஒன்றுள
தால்நறுந் தண் **எருக்கின்**
தேனுடைக் கொன்றைச் சடையுடைக்
கங்கைத் திரைதவழுங்
கூனுடைத் திங்கட் குழவியெப்
போதுங் குறிக்கொண்மினே. 4.105.4

**வெள்ளெ ருக்க**ர வம்விர வுஞ்சடைப்
புள்ளி ருக்குவே ளூரரன் பொற்கழல்
உள்ளி ருக்கு முணர்ச்சியில் லாதவர்
நள்ளி ருப்பர் நரகக் குழியிலே. 5.79.1

**எருக்கங்** கண்ணிகொண் டிண்டை புனைந்திலர்
பெருக்கக் கோவணம் பீறி யுடுத்திலர்
தருக்கி னாற்சென்று தாழ்சடை யண்ணலை
நெருக்கிக் காணலுற் றாரங் கிருவரே. 5.95.5

தோடேறும் மலர்க்கொன்றை சடைமேல் வைத்தார்
**துன்** **எருக்கின்** வடம்வைத்தார் துவலை சிந்தப்
பாடேறு படுதிரைக ளெறிய வைத்தார்
பனிமத்த மலர்வைத்தார் பாம்பும் வைத்தார்
சேடேறு திருநுதன்மேல் நாட்டம் வைத்தார்
சிலைவைத்தார் மலைபெற்ற மகளை வைத்தார்
நாடேறு திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே. 6.14.3

புரையுடைய கரியுரிவைப் போர்வை யானைப்
புரிசடைமேற் புனலடைத்த புனிதன் றன்னை
விரையுடைய **வெள்ளெருக்கங்** கண்ணி யானை
வெண்ணீறு செம்மேனி விரவி னானை
வரையுடைய மகள்தவஞ்செய் மணாளன் றன்னை
வருபிணிநோய் பிரிவிக்கும் மருந்து தன்னை
நரைவிடைநற் கொடியுடைய நாதன் றன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டேன் நானே. 6.74.5

ஏடேறு மலர்க்கொன்றை அரவு தும்பை
இளமதியம் **எருக்கு**வா னிழிந்த கங்கைச்
சேடெறிந்த சடையானைத் தேவர் கோவைச்
செம்பொன்மால் வரையானைச் சேர்ந்தார் சிந்தைக்
கேடிலியைக் கீழ்வேளூ ராளுங் கோவைக்
கிறிபேசி மடவார்பெய் வளைகள் கொள்ளுங்
காடவனைக் கஞ்சனூ ராண்ட கோவைக்

கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே. 6.90.6

மூடாய முயலகன் மூக்கப் பாம்பு
முடைநா றியவெண் டலைமொய்த்த பல்பேய்
பாடா வருபூதங் கள்பாய் புலித்தோல்
பரிசொன் றறியா தனபா ரிடங்கள்
தோடார் மலர்க்கொன்றை யுந்துன் **எருக்குந்**
துணைமா மணிநா கம்அரைக் கசைத்தொன்
றாடா தனவேசெய் தீர்எம் பெருமான்
அடிகேள் உமக்காட் செயஅஞ் சுதுமே. 7.2.03

திரிவன மும்மதிலும் எரித்தான்இமை யோர்பெருமான்
அரியவன் ***அட்டபுட்பம்** அவைகொண்டடி போற்றிநல்ல
கரியவன் நான்முகனும் அடியும்முடி காண்பரிய
பரியவன் பாசுபதன் பழமண்ணிப் படிக் கரையே. 7.22.8

கருக்கநஞ் சமுதுண்ட கல்லாலன் கொல்லேற்றன்
தருக்கருக் கனைச்செற் றுகந்தான்றன் முடிமேல்
**எருக்க**நாண் மலரிண்டை யும்மத்த முஞ்சூடி
இருக்குமூர் எய்தமான் இடையா றிடைமருதே. 7.31.7

மத்தமாமலர் கொன்றைவன்னியுங்
கங்கையாளொடு திங்களும்
மொய்த்தவெண்டலை கொக்கிறகொடு
**வெள்ளெருக்க**முஞ் சடையதாம்
பத்தர்சித்தர்கள் பாடியாடும்பைஞ்

ஞீலியேன்என்று நிற்றிரால்
அத்தியீருரி போர்த்திரோசொல்லும்
ஆரணீய விடங்கரே. 7.36.8

இறந்தார் என்பும் **எருக்கு**ஞ் சூடிப்
புறங்காட் டாடும் புனிதன் கோயில்
சிறந்தார் சுற்றந் திருவென் றின்ன
துறந்தார் சேருஞ் சோற்றுத் துறையே. 7.94.7

2. உலகின்மேல் வைத்துரைத்தல்
காய்சின வேலன்ன மின்னியல் கண்ணின் வலைகலந்து
வீசின போதுள்ள மீனிழந் தார்வியன் தென்புலியூர்
ஈசன சாந்தும் **எருக்கு** மணிந்தோர் கிழிபிடித்துப்
பாய்ச்சின மாவென ஏறுவர் சீறூர்ப் பனைமடலே. 8.தி.கோவை. 74

கிளர்ந்துந்து வெந்துயர் வந்தடும் போதஞ்சி நெஞ்சம்என்பாய்த்
தளர்ந்திங் கிருத்தல் தவிர்திகண் டாய்தள ராதுவந்தி
வளர்ந்துந்து கங்கையும் வானத் திடைவளர் கோட்டுவெள்ளை
இளந்திங் களும்**எருக் கும்**மிருக் குஞ்சென்னி ஈசனுக்கே. 11.காரைக்-3. 1

இறைக்கோ குறைவில்லை உண்டிறை யேஎழி லார் **எருக்கு**
நறைக்கோ மளக்கொன்றை துன்றும் சடைமுடி நக்கர் சென்னிப்
பிறைக்கோர் பிளவும் பெறுவிளிக் கொண்டெம் பிரான்உடுக்கும்
குறைக்கோ வணம்ஒழிந் தாற்பின்னை ஏதுங் குறைவில்லையே.
11.கபில-2.4

இடைதரில் யாமொன் றுணர்த்துவ துண்டிமை யோர்சிமையத்
தடைதரு மூரிமந் தாரம் விராய்நதி வெண்ணிலவின்
தொடைதரு துண்டங் கிடக்கினுந் தொண்டர் ஒதுக்கியிட்ட
புடைதரு புல் **எருக் கு**ஞ்செல்லு மோநின் புரிசடைக்கே. 11.இளம்பெரு-1.3

உடைதலையின் கோவை ஒருவடமோ கொங்கை
புடைமலிந்த **வெள்ளெருக்கம்** போதோ - சடைமுடிமேல்
முன்னநாள் பூத்த முகிழ்நிலவோ முக்கணா
இன்னநாள் கண்ட திவள். 11.இளம்பெரு-1.8

பொருளாக யானிரந்தால் புல் **எருக்கின்** போதும்
அருளான்மற் றல்லாதார் வேண்டின் - தெருளாத
பான்மறா மான்மறிக்கைப் பைங்கட் பகட்டுரியான்
தான்மறான் பைங்கொன்றைத் தார். 11.இளம்பெரு-1.23

திங்கட் கொழுந்தொடு பொங்கரவு திளைக்கும்
கங்கைப் பேரியாற்றுக் கடுவரற் கலுழியின்
இதழியின் செம்பொன் இருகரை சிதறிப்
புதல் **எருக்கு** மலர்த்தும் புரிபுன் சடையோன்
திருவருள் பெற்ற இருபிறப் பாளன்

11.நம்பி-6.(5)

# சங்க இலக்கியத்தில் எருக்கு

சங்க காலத்திலும் “எருக்கு” என்று தான் இதற்கு பெயர். பல சங்க இலக்கிய புலவர்கள் தங்கள் பாடல்களில் எருக்கஞ் செடியை குறிப்பிட்டுள்ளனர். கூகிள் உதவியுடன் சில...

“குறுமுகழ் எருக்காவ் கண்ணி” - நற்றிணை

“குவியினார் எருக்கு” - கபிலர்

“புல்லெருக்கங்கண்ணி நறிது” - தொல்காப்பியம்

“வாட்போக்கி கலம்பகம்” எனும் நூலிலும் எருக்கம் செடியை பற்றியும் இதன் பால் கொடியது. ஆயினும் மருந்துக்கு பயன்படுகிறது என குறிப்பிடப்பட்டுள்ளது.

“நல்லவும் தீயவும் அல்ல குவி இணர்ப்
புல், இலை, எருக்கம் ஆயினும், உடையவை
கடவுள் பேணேம் என்னா” - கபிலர்

மடலேறுதல் என்று நிகழ்வில், மடலேறும் தலைவன் எருக்க மாலை, ஆவாரம் பூ மாலை முதலியவற்றை அணிந்து வருவது வழக்கம் என்று

’’மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப
மறுகின் ஆர்க்கவும் படுப
பிறிதும் ஆகுப காமங்காழ் கொளினே’’ - குறுந்தொகை

கார் காலத்து எழுகின்ற கார் முகில்காள்! வேம்கடத்து
போர் காலத்து எழுந்து அருளி பொருத வனார் பேர் சொல்லி
நீர் காலத்து எருக்கின் அம் பழ இலை போல் வீழ்வேனை
வார் காலத்து ஒரு நாள் தம் வாசகம் தந்து அருளாரே
- நாச்சியார் திருமொழி

எருக்கலாம் கொழுந்து மீறி ஏகமாய் பூத்திட்டாலும்
மரிக்கொழுந்தினுக்கு உண்டான வாசமும்மனமும் உண்டோ?

-ராஜகோபால மாலை

# நஞ்சு அல்ல அமுது

இன்றைய சமுதாயம் எருக்கை நஞ்சு என ஒதுக்கி வைத்து இருக்கிறது. எப்போதுமே நல்லனவற்றை ஒதுக்கி வைத்திருக்கும் மன நிலை அல்லனவற்றையே நல்லது என எண்ணி துணியும். அது போலவே இந்த எருக்கஞ் செடியை “நஞ்சு அதை பார்த்தால் அஞ்சு” என்பது போல ஒதுக்கி வைத்து இருக்கிறது.

உண்மையில் இந்த எருக்கு, இறைவனுக்கு பூஜைக்குக் பயன்படுத்தும் அஷ்ட புஷ்பங்களில் ஆற்றல் மிக்கதாக சொல்லப்படுகிறது. வாசனை இல்லாத பூ இறைவனுக்கு ஆகாது என நமக்கு மாறுபாடான கருத்தை சொல்லி தந்து இருந்தால் அதனை அறிவு பூர்வமாக எடுத்துக் கொண்டு சிந்தித்து பாருங்கள்.

பயன் தர கூடிய எதையும் இறைவனுக்கு படைக்கலாம். அங்கே அன்பு தான் முக்கியம் என்பதை பல புராண கதைகளில் இருந்து அறிந்து கொள்ளலாம். அந்த விளக்கத்தை சொல்லாமலே அறிவீர்கள் என நம்புகிறோம்.

இறைவனுக்கு படைக்கும் அனைத்தும் மனிதனுக்கு பயன்படும் என்ற பொது கருத்தின் படி, எருக்கு இறைவனுக்கு படைக்கபடுகிறது என்றால் அது மனிதனுக்கு நிச்சயம் பயன்படும் தானே.. அந்தவகையில் இதில் உள்ள பல மருத்துவ பயன்கள், இதிலிருந்து பெறப்படும் பொருட்கள், என பலவித பயன்களை நாம் அறியலாம்.

உயிர் காக்கும் மருந்து மட்டுமல்ல, உடல் ஆரோக்கியம் காக்கும் அமுதாகவும் இது இருப்பதால் எருக்கு - நஞ்சு அல்ல அமுது என்பதை அறிந்து கொள்வோம்.

இறைவனுக்கு படைக்கப்பட்டது மனிதனுக்கு பயன்பட்டது என நிற்காமல், வெட்டுக்கிளி, பட்டுப் புழுவுக்கும் உணவாகிறது. ஆக பல்லுயிருக்கும் பயன் தரும் இந்த எருக்கு - நஞ்சு அல்ல அமுது என அழுத்தி சொல்லுங்கள்.

விவசாய நிலங்களில் இயற்கை முறை பூச்சிக் கொல்லிக்கும் போரான் சத்து நிறைந்த எருக்கே முதலில் வந்து பயிர்களை காக்கிறது.

புதியதாக தோட்டம் போடுபவர்கள், முதலில் பால் வடியும் செடி, மரங்களையே நட்டு வைப்பார்கள். அப்படி ஒரு நம்பிக்கை தமிழக மக்களுக்கு. அந்த வகையில் பால் வடியும் செடியாக எருக்கு இருப்பதால் முதலில் எருக்கை பயிரிட தொடங்குவோம். எருக்கு - நஞ்சு அல்ல அமுது என உணர்வோம்.

தானாக வரும் எருக்கை தனியாக வளர்த்தாலும் சரி, தானாக வந்ததை வெட்டாமல் எடுத்து பராமரித்தாலும் சரி. அதுவே இந்த புத்தகத்திற்கு கிடைத்த வெற்றியாகும்.

இனியாவது சொல்லுவோம், எருக்கு - *நஞ்சு அல்ல அமுது* என்று...

வணக்கம்

## எருக்கு இலை:

நீள் வட்ட வடிவில் முட்டைவடிவில் இருக்கும். இதன் மேல் பரப்பில் சாம்பல் படலம்போல இருக்கும். இலை பசுமையாகவே இருக்கும். நீர் இல்லை என்றாலும் நிறம் மஞ்சள் நிறமாக மாறாமல் பசுமையாகவே இருக்கும். வெட்டுக்கிளிக்கு இதுவே உணவு. மொனார்க் வகை பட்டு புழுவும் இதன் இலை அடியில் முட்டை இட்டு வாழும்.



## எருக்கு மொட்டு:

இதன் மொட்டு நீள் வட்ட வடிவில் இருக்கும். மகரந்த பை உள்ளேயே இருக்கும். மொட்டாக இருக்கும் தருவாயில் அழுத்தினால் வெடிப்பது போல ஒரு சத்தம் வரும். இந்த மொட்டாக உள்ள பூவையும் இலையையும் அஷ்ட கர்மங்களில் பயன்படுத்துவார்கள்



## எருக்கம் பூ.

மொட்டு மலர்ந்து பூவாகும். இந்த பூ மலர்ந்த நிலையில் மொட்டின் இதழ் விரிந்து கிரீடம் போல போல இருக்கும். அதனால் இதனை crown flower என்று அழைக்கிறார்கள். இந்த விரிந்த இதழ்களை கழற்றி விட்டு, ஊசி நூல் கொண்டு கோர்த்து மாலையாக இறைவனுக்கு சாற்று பழக்கம் இந்து சமூகத்தில் உள்ளது.



காசி-வாரணாசியில் உள்ள சிவன் கோவில்களில் இந்த மாலை தான் சாற்றுவார்கள்

.

## வெள்ளெருக்கு

நீல எருக்கு போலவே வெள்ளெருக்கும் உள்ளது. நீல எருக்கு இராம எருக்கு என்றும் வெள்ளெருக்கு சிவ பெருமானுக்கும் மாலை சாற்றுவது வழக்கம். பிள்ளையாருக்கு இரண்டு நிற எருக்கும் பயன்பாட்டில் உள்ளது. இரண்டும் தன்மையில் ஒன்று தானே தவிர நிறத்தில் மட்டும் வேறுபட்டு இருக்கும். வெள்ளெருக்கில் தான் விநாயகர் உருவம் செய்து வழிபடுவார்கள். வீட்டு வாசலில் திருஷ்டிக்கு கட்டுவார்கள்.



## எருக்கம் பஞ்சு:



வளர தொடங்கும். இந்த பஞ்சு பருத்தி பஞ்சு போல எடுத்து நூல் எடுத்து ஆடைகள் செய்ய பயன்படுத்த படுகிறது. இந்த பஞ்சு மூலம் திரி எடுத்து விளக்கில் இட்டு இறைவனுக்கு சமைக் கவும் பயன்படுத்தபடுகிறது

## எருக்கம்பூ தண்டு.

பூவை தாங்கி நிற்கும் தண்டில் இருந்து நார் எடுப்பார்கள் இந்த நார் உறுதியாக இருக்கும். நைலான் நார் வருவதற்கு முன் இது தான் மக்கள் பயன்பாட்டில் பண்டைய நாளில் இருந்ததாக சொல்லப்படுகிறது எருக்கின் அனைத்து பகுதிகளும் மக்களுக்கு பயன்படுகிறது. இது நஞ்சு அல்ல அமுது என புரிந்து போற்றுவோம்



# எருக்கு பயோடேட்டா

| | | |
|---|---|---|
| திணை | : | தாவரம் |
| பிரிவு | : | பூக்கும் தாவரம் |
| வகுப்பு | : | MAGNOLILPSIDA |
| வரிசை | : | Gentianales |
| குடும்பம் | : | Apocynaceae |
| துணைக்குடும்பம் | : | Asclepiadoideae |
| பேரினம் | : | Calotropis |
| பராமரிப்பு | : | எதுவும் இல்லை |
| நீர் மேலாண்மை | : | காற்றில் உள்ள நீரை எடுத்து பத்தாண்டுகளுக்கு மேல் வாழும் |
| இனப்பெருக்கம் | : | வெட்டி வைத்தாலே வரும். |
| வகை | : | குறு மரம். ஐந்து அடிவரை செடியாக வளரும் |
| பயன்பாடு | : | இலை, காம்பு, கிளை, பூ, காய், தண்டு, வேர், பால், பஞ்சு என அனைத்து பகுதிகளும் பயன்படும். |
| வேறு பெயர்கள் | : | அருக்கன், ஆள்மிரட்டி, தேவ மூலிகை மகுடமலர் (crown flower) |

கவனம் தேவை : வளர்ந்த செடியை வெட்டுவது கடினம் தானே வெடித்து வளரும் தன்மையது. நெருக்கி வளர்ந்து விட்டால் வெட்டுவது சிரமம். வெட்டிய இடத்தில் இருந்து பால் போல வரும். அரிவாள் கொண்டு வெட்டினால், பால் போன்ற திரவம் சிதறி உடலில் பட்டால் அரிப்பு ஏற்படும் அதனால் வெட்டி நடும் போது, அல்லது பராமரிக்கும் போது கவனமாக இருப்பது நல்லது.

# துணை நின்றவர்களும், நன்றிக்குரியவர்களும்,

| | | |
|---|---|---|
| மருத்துவ குறிப்புகள் | : | மூலிகை வளம் திரு.குப்புசாமி, கோயம்புத்தூர் |
| புகைப்படங்கள் | : | திரு B.R.சபாபதி, COO, Nature for Future, |
| | : | திரு இராஜன், தொல்காப்பிய பூங்கா |
| ஓய்வு & சிந்தனைக்கு | : | G3 garden, நமண்டி கிராமம், வெம்பாக்கம். |
| திருமுறை குறிப்புகள் | : | shaivam.org |
| தகவல் உறுதி செய்தல் | : | கூகிள் படைப்பாளிகள் |
| வாழ்த்துரை | : | திரு B. இரத்தினசபாபதி, M.Sc., M.Phil., Ecologist, Coimbatore. |
| அணிந்துரை | : | திரு S.ஸ்ரீராம், மென்பொருள் மேலாளர் |
| பதிப்புரை | : | மணி பதிப்பகம் |
| மீடியா உதவி | : | திரு. R.மணிகண்டன், B.Com., Treasurer, arulalayam |
| தயாரிப்பில் உதவி | : | மென்பொருள், & மின்குழந்தைகள் |
| சந்தை | : | அமேசான் கிண்டல், scribd மின்நூலகம் போன்ற மற்றும் சமூக வலை தளங்கள் |
| நிதி கையாளுதல் | : | rozarpay |
| மின் இணைப்பு | : | TANGEDCO |

# பதிப்புரை

எருக்கு என்ற சொல்ல தொடங்கிய உடனே எங்கள் வீட்டிலுள்ளவர்கள் நெருப்பு பார்வை கொண்டு என்னை பார்க்க தொடங்கினார்கள். எருக்கின் மீது அப்படி என்ன வெறுப்பு என்று எனக்கும் அப்போது தெரியவில்லை.. நூல் ஆசிரியரின் ஒப்புகை படிகளை அவர்களுக்கு படித்து சொன்னபிறகு தான் எருக்கில் இருக்குதா இத்தனை விஷயம் என வெறுப்பாக பார்த்தவர்கள் எருக்கு மீது விருப்பு என்பதுபோல் பார்க்க தொடங்கினார்கள்.

நூல் ஆசிரியர் தமது வித்தியாசமான சிந்தனைகளை விவரம் பொதிந்த தகவல்களுடன் தருவதில் வல்லவர். அவர் தம் திறமையும், படைப்பு திறனும் ஒவ்வொரு பதிப்பிலும் பதிப்பாசிரியராக பார்த்து வியந்து இருக்கிறோம். அவர் தம் எண்ணங்களிலும் சரி, செயல்களிலும் சரி, தனக்கு என தனி முத்திரை கொண்டு, தனி ஒருவனாக, தன்னை முன் நிறுத்தி காட்டும் வல்லவர். இந்த இருபதாம் நூற்றாண்டில், இப்படி கூட ஒருவரா என்று நாங்கள் வியப்பில் ஆழ்ந்தது உண்டு. இந்த பெருமகனாரின் எண்ணங்களையும் சிந்தனைகளையும் நூலாக பதிப்பித்து படைத்து தருவதில் பேரின்பம் அடைகிறோம். அடுத்த பதிப்பில் உள்ள இவர் தம் நூல்களான, வெளிச்சத்திற்கு வாங்க, திருக்குறள் சிந்தனைகள், ஒரு நாள் , என அடுத்து அடுத்து நூல்கள் அச்சில் உள்ளது.

அவை விரைவில் வர இருக்கிறது. ஆசிரியரின் நூல்களை அன்பர்கள் படித்து பயன் பெற வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

நூல்களை படிக்கும் பழக்கம் இன்றைய நாளில் குறைந்து விட்டது. அதற்கு தொழில் நுட்பம் உட்பட பல காரணங்கள் சொல்லலாம். அதனால் இந்த புத்தகம் மின் பதிப்பாக வருகிறது. ஈ புத்தகமாக இருந்தால், எங்கும் எடுத்துச் செல்லலாம். இடத்தை அடைத்துக் கொள்ளாது பிழைகளை சுலபமாக திருத்திக் கொள்ளலாம். வார்த்தைகளை வைத்து தேடி விரும்பிய பக்கத்திற்கு போகலாம். என பல வசதிகள் இருந்த போதும்,

இந்த நூல்கள் பல்வேறு ஆன்லைன் தளங்களில் கிடைக்கும். போட்காஸ்ட் சானல்களில் ஆடியோ புத்தகமாகவும் கேட்கும் படி இதனை அமைத்து தந்து உள்ளோம். நூல்களை படித்து பயன் பெறுவது ஒன்றே நூல் ஆசிரியருக்கு நாம் தரும் ஊக்க மருந்து. எவ்வித எதிர்பார்ப்பும் இல்லாமல் அறிவை பகிரும் இந்த நூல் ஆசிரியர் தம் எண்ணங்களுக்கு பலம் சேர்ப்போம். பயன் பெறுவோம்.

- பதிப்பாளர்

# ஆசிரியரின்
## மக்கள் மனம் கவர்ந்த பிற நூல்கள்.



















இந்த புத்தகங்களை, ஆன்லைனில்,

அமேசான்,

விக்கிமீடியா

ஸ்க்ரிப்ட் மின் நூலகம் மற்றும்

கூகிள் பிளே ஸ்டோரில் பெறலாம்.




ஆடியோ புத்தகமாக Channel G & G3 Garden - podcastல் கேட்கலாம்.

இந்த புத்தக கட்டமைப்புக்கு பணம் தந்து உதவலாம்.

இது இன்னும் புத்தகம் வெளிவர ஊக்கம் அளிக்கும்.

# நூலாசிரியர் பற்றி...

விசு அய்யர், தமிழ்நாட்டில் உள்ள வீரம் செறிந்த பசும்பொன் முத்துராமலிங்க தேவர் மாவட்டத்தில், சிவகெங்கை சீமையில் இந்துக்களால் சிறப்பாக கொண்டாடப்படும் ஸ்ரீ கிருஷ்ண ஜெயந்தி நன்னாளில், இன்று உலக எழுத்தறிவு தினமாக கொண்டாடப்படும் தினத்தில் தோன்றியவர்.



வரி சட்டத்தில் முதுகலை பட்டம் பெற்றவர். பள்ளி நாள் முதல் தொடர்ந்து சிறந்த மாணவனாக தேர்ந்து எடுக்கப்பட்ட இவர் இந்திய அளவிலான நினைவு திறன் போட்டியில் பரிசு பெற்றவர். தேசிய அளவிலான அதிவேக தட்டச்சு போட்டியில் வெற்றி பெற்றவர். “சித்தாந்த ரத்னா”, “திருவருட் செல்வர்”, “கைரேகை கலைஞன்” போன்ற இவர் பெற்ற பாராட்டுக்களும் நன்மதிப்பும் பெருமைக்கு உரியன.

இன்று வரை உண்மையான பிரம்மச்சரிய வாழ்க்கையில், உணவிலும், உணர்விலும் இயற்கையோடு இனைந்து வாழும் சீரிய ஒழுக்கத்தை கொண்டவர். பெரியபுராணம், திருக்குறள், மற்றும் சைவ திருமுறைகளில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்ட இவர் சமய இலக்கியங்களில் பல ஆய்வு கட்டுரைகளை பதிப்பித்து உள்ளார்.

பன்முக திறமை கொண்ட இவர் எழுதிய சோதிட புத்தகங்களும் வார இதழில் எழுதும் தொடர் கட்டுரைகளும் வாசகர்கள் நெஞ்சத்தை கிள்ளி செல்லும். இவருக்கு என்றே ஒரு வாசகர் கூட்டம் இவரை சுற்றி தொடரும்.

சென்னை அரிமா சங்கம், சென்னை சுழற் சங்கம், அறிதுயில் சங்கம் மற்றும் குடும்ப நற்பணி மன்றம் போன்ற பல இடங்களில் பல்வேறு தலைப்புகளில் உரை நிகழ்த்தி உள்ளார்.

உடலாலும் உள்ளத்தாலும் சீரிய ஒழுக்கத்தினாலே இன்றும் சொல்லிலும் செயலிலும் இளைஞனாகவே இருக்கின்றார். சொந்த வாழ்க்கையில் மட்டுமின்றி, நடைமுறை வாழ்க்கையிலும் ஒரு ஒழுக்க முறையினை செயல்படுத்தும் இவர் கையில் திருக்குறளும், பையில் திருநீறும், மெயில் உருத்திராக்கமும் இருக்கும் என்பதே இவரின் எளிய அடையாளம்.

இவரின் எண்ணக் கருத்துக்களை நூலாக்கி படைப்பதில் பதிப்பாளராக பெருமை கொள்கிறோம்

